# நாள் முழுவதும்





காலை வேளையில்

# புத்துணர்ச்சி





பிற்பகலில்

# அளிக்க...





இரவில்




குளுமையான, நறுமணம் கொண்ட

## ஹிமாலயா புக்கே பௌடர்களை உபயோகியுங்கள்

இரண்டு தேர்ந்தியான [illegible] தயாரிப்புகள்



ஹிமாலயா புக்கே ஸ்னோ எல்லா சீதோஷ்ண நிலைகளிலும்
சருமத்தைப் பாதுகாக்கிறது.

# கல்கி பொருளடக்கம்


| | | |
|---|---|---|
| மலர் 13<br>இதழ் 47 | 1954 ஜூன் 20 | ஜய வருஷம்<br>ஆனி 6 |




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

ஆழப்பாழவந்த திலகா அக்ரமக்காரனுக்குப் பலியாகி பித்தம்பிடித்தலையும் காட்சி
எவர் உள்ளத்தையும் உருகவைக்கிறது...... கண்ணீர் சிந்துகிறார்கள்
கட்டழகிக்கு நேரிட்ட கதியைக்கண்டு.......

பரிமளம் பிக்சர்ஸ்

# சொர்க்க வாசல்

நெஞ்சை அள்ளும் காட்சிகள்கொண்ட கலைவிருந்து

4 வது வாரம்

சென்னை காஸினோ, பிரபாத், சயானி
மற்றும் தமிழ்நாடெங்கும் நடைபெறுகிறது......

கதை.வசனம். அறிஞர் அண்ணா

டைரக்ஷன் - A.காசிலிங்கம்  பாடல்கள் - உடுமலைநாராயணகவி  புரொட்யூஸர்ஸ் - M.சோமசுந்தரம் & N.K.காளியப்பா




மலர் 13 | தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 47

# போட்டி போடாதீர்!

தமிழ் நாடு மிகச் சிறந்த நாடு; தெய்வத் திருநாடு. இத் தமிழ் நாட்டில் பிறந்த தமிழ் மக்கள் மிக நல்லவர்கள்; அறிவிற் சிறந்தவர்கள்; ஒழுக்கத்திலும் பண்பாட்டிலும் மிக மிக உயர்ந்தவர்கள்.

இவ்வாறிருந்தும், சென்ற முப்பத்தைந்து ஆண்டுகளாகத் தீமை பயக்கும் துவேஷப் பிரசாரங்கள் மலிந்து தமிழ் நாட்டின் பொது வாழ்வைக் கெடுத்து வருகின்றன. மக்களின் தூய உள்ளத்தில் நஞ்சைக் கலந்து வருகின்றன. பல்லாயிரம் ஆண்டுகளாகத் தமிழகத்தில் நிலைபெற்றுச் செழித்த நல்ல சக்திகளை அமுக்கிக் கொண்டு ஒவ்வொரு வேளை ஒவ்வோரிடத்தில் தீய சக்திகள் மேலோங்கி வருகின்றன.

"தெள்ளிய தேனில் ஓர் சிறிது நஞ்சையும்
சேர்த்தபின் தேனுமோ?"

என்று மகாகவி பாடியதற் கிணங்கத் தமிழ் நாட்டின் பொதுவாழ்க்கை துவேஷப் பிரசாரங்களால் விஷங் கலந்ததாகி வருகிறது.

இதற்கெல்லாம் அடிப்படையான மூல காரணம் என்னவென்று ஆராய்ந்து பார்த்தோமானால், ஆங்கிலம் படித்தவர்களிடையே பரவியுள்ள *உத்தியோகப் போட்டிதான்* என்பது தெரிய வரும்.

துவேஷப் பிரசாரத்தில் ஈடுபடுவோர் சில சமயம் அதை வெளிப்படையாகச் சொல்லுகிறார்கள்; இன்னின்ன சாதி வகுப்பைச் சேர்ந்தவர்கள் இத்தனை யித்தனை உத்தியோகங்களைப் பார்க்கிறார்கள் என்று புள்ளி விவரம் கொடுக்கிறார்கள்.

இன்னும் சில சமயம், அவலை நினைத்துக் கொண்டு உரலை யிடிப்பதுபோல், உத்தியோகப் போட்டியை மனத்தில் வைத்துக் கொண்டு மதத்தின் பேரிலும், தெய்வங்களின் பேரிலும், ஆலயங்களின் பேரிலும், ஒப்பற்ற பழம் பெரும் தமிழ் நூல்களின் பேரிலும், உச்சிக் குடுமியின் பேரிலும் பாய்கிறார்கள்!! இந்தப் போராட்டத்துக்குப் பக்க பலமாக ஆரியரையும், வடநாட்டாரையும், ஹிந்தி மொழியையும் சூரபதுமனாகவும், விருத்திராசுரனாகவும், பிரம்ம ராட்சதனாகவும் வர்ணித்துத் தாக்குகிறார்கள்!! ஹிந்தி எழுத்தின் பேரில் தாரைப் பூசி விட்டு வெற்றி முரசு கொட்டுகிறார்கள்!!!

"ஒரு சிலரின் உத்தியோகத்துக்காகவும் பட்டம் பதவிகளுக்காகவும் இவ்வளவு கூப்பாடு போட வேண்டுமா? இதற்கு ஓர் இயக்கமா? இதற்காக இத்தனை தீய சக்திகளைக் கிளப்பி நாட்டைக் கெடுக்க வேண்டுமா?" என்று பொது மக்கள் கேட்பார்களே என்பதற்காகத்தான், உத்தியோகப் போட்டியை மட்டும் இயக்கத்துக்குக் காரணமாகக் காட்டாமல், வேறு பல துறைகளிலும் தீய சக்திகளைக் கிளப்பிக் குழப்பம் உண்டாக்கி நாட்டைப் பாழ்படுத்துகிறார்கள்.

நன்றாகச் சிந்தித்துப் பார்த்தால், துவேஷப் பிரசாரங்கள் — இயக்கங்கள் எல்லாவற்றுக்கும் மூல காரணம் உத்தியோகப் போட்டிதான் என்பது தெரிய வரும்.

* * * *

புயலையும், சூறாவளியையும், சண்டமாருதத்தையும் போன்ற துவேஷப் பிரசாரங்களைச் செய்த போதிலும் தமிழ்நாட்டுப் பொது மக்களின் நேர்மை குடிகொண்ட உள்ளத்தையும், அன்பு — அறநெறி இவற்றை அடிப்படையாகக் கொண்ட புனித வாழ்வு முறையையும் அடியோடு கெடுத்துவிட முடியாது என்பதற்கு எத்தனை எத்தனையோ உதாரணங்கள் கிடைத்திருக்கின்றன.

சரித்திரப் பிரசித்தமான ஓர் உதாரணத்தை மட்டும் இங்கே குறிப்பிடுகிறோம்.

பதினெட்டு ஆண்டுகளுக்கு முன்னர் சென்னைமா நகரில் இந்திய சட்ட சபைக்குத் தேர்தல் நடந்தது. ஸ்ரீ ஏ. ராமசாமி முதலியாரும், ஸ்ரீ எஸ். சத்தியமூர்த்தியும் போட்டி

யிட்டார்கள். அறிவிலும், ஆற்றலிலும், பல் கலைப் பயிற்சியிலும், வாக்கு வன்மையிலும், அரசியல் சாணக்யத்திலும், பரவலான நண்பர் குழாத்திலும் ஸ்ரீ ஏ. ராமசாமி முதலியார், ஸ்ரீ எஸ். சத்தியமூர்த்திக்கு எந்த விதத்திலும் சளைத்தவர் அல்ல; சில துறைகளில் மேம்பட்டவர் என்றே சொல்லலாம்.

ஸ்ரீ எஸ். சத்தியமூர்த்தியோ தமிழ் நாட்டுத் தேசிய காங்கிரஸ் வாதிகளுக்குள் மிக்க வைதிகப் பற்று உள்ளவர். உச்சிக் குடுமி வைத்திருந்தவர்; பட்டை பட்டையாக விபூதி அணிந்தவர்; சொற்பொழிவுகளில் அடிக்கடி சம்ஸ்கிருத சுலோகங்களைக் கையாண்டவர்; ஆலய தரிசனத்தில் பற்றுக் கொண்டவர்; ஸ்ரீ சங்கராச்சாரியாரின் சிடர்; சமூக சீர்திருத்தங்களுக்கு அவசரப்படக் கூடாது என்று வெளிப்படையாகப் பேசியவர்.

ஸ்ரீ ஏ. ராமசாமி முதலியார் 'பிராமணரல்லாதாரின் நலன்களைப் பாதுகாக்கப் போகிறேன்' என்ற அடிப்படையில் தேர்தலுக்கு நின்றார். அவருக்காகப் பிரசாரம் செய்தவர்கள் அச்சமயம் சென்னைமாநகரின் மூலை முடுக்குகளிலெல்லாம் துவேஷப் பிரசாரப் புழுதியைக் கிளப்பினார்கள். *

ஆயினும், ஸ்ரீ சத்தியமூர்த்தி பெருவாரியான வோட்டுக்களைப் பெற்று வெற்றி யடைந்தார்.

இன்னமும் தமிழ் நாட்டில் அதே அடிப்படை நிலைமைதான் குடி கொண்டிருக்கிறது. பொது மேடைகளிலும், நாடக மேடைகளிலும், சினிமாத் திரையிலும், பத்திரிகைகளிலும், எண்ணற்ற குறைந்த விலைப் பிரசுரங்களிலும் துவேஷப் பிரசாரம் செய்யப்பட்டிருந்த போதிலும், பண்பாட்டில் ஊறிய தமிழ்ப் பொது மக்களின் உள்ளம் அவற்றினால் பாதிக்கப்படவில்லை. இல்லாவிட்டால், சென்ற பொதுத் தேர்தலில் சென்னை நகர்ப் பார்லிமெண்டு தொகுதிக்கு ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரியாரும், சென்னை மத்திய தொகுதிக்கு டாக்டர் யு. கிருஷ்ணராவும், தாம்பரம் தொகுதிக்கு ஸ்ரீ என். ராமகிருஷ்ண ஐயரும், துவேஷப் பிரசாரத்தின் கேந்திர ஸ்தானங்களில் ஒன்றான திருநெல்வேலி நகர்த் தொகுதிக்கு ஸ்ரீ எஸ். என். சோமயாஜுலுவும் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்க முடியாதல்லவா!

மக்களுக்கும் தேசத்துக்கும் நல்ல முறையில் தொண்டு செய்யக் கூடியவர்கள் யார் என்பதைத் தமிழ்ப் பொதுமக்கள் கவனிப்பார்களேயன்றி, சாதி-மதம் முதலியவற்றைக் குறிப்பிட்டுச் செய்யப்படும் துவேஷப் பிரசாரங்கள் அவர்களைக் கவர்ந்துவிட முடியாது என்பது இன்றைக்கும் உண்மையாகவே இருந்து வருகிறது.

• • •

தமிழ் நாட்டின் அடிப்படையான சூழ்நிலை இவ்விதம் திருப்திகரமாக இருந்த போதிலும், சில கூட்டத்தார் இடைவிடாமல் துவேஷப் பிரசாரங்களில் ஈடுபட்டிருப்பது நாட்டின் நன்மைக்கு உகந்தது என்று யாரும் சொல்ல மாட்டார்கள்.

சுதந்திர பாரத நாட்டில் தமிழ் நாடு இப்போது ஏறக்குறைய ஒரு தனி இராஜ்யமாக அமைந்திருக்கிறது. அறிவாற்றலிலும் பண்பாட்டிலும் சிறந்த தமிழ் மக்கள் இச்சமயம் தமிழகம் பல துறைகளிலும் முன்னேற்ற மடைவதில் முழு கவனத்தையும் செலுத்த வேண்டும். அவ்வாறு ஒரு முகமாக முன்னேற்ற முயற்சிகளில் தமிழ் மக்கள் ஈடுபட்டால், செந்தமிழ் நாடு சிறந்தோங்குவதுடன் பாரத நாட்டிலுள்ள மற்ற இராஜ்யங்களுக்கெல்லாம் முன்நின்று வழிகாட்டும் பெருமையை அடையலாம்.

சாதித் துவேஷம், ஆரியத் துவேஷம், நாஸ்திகப் பிரசாரம் ஆகியவற்றில் தமிழ் மக்களின் கவனம் சிதறுவது தமிழகத்தின் முன்னேற்றத்தைத் தடை செய்கிறது என்று சொல்லவேண்டியதில்லை.

இந்தத் தீய சக்திகளுக்கெல்லாம் மூலாதார காரணமாயிருப்பது உத்தியோகப் போட்டிதான் என்பதை முதலிலேயே சுட்டிக் காட்டினோம்.

ஆதலின் தமிழகம் விரைந்து முன்னேற வேண்டுமென்று கருதுவோரெல்லாரும் உத்தியோகப் போட்டியை ஒழிப்பதற்கு முயல வேண்டும்.

* ஸ்ரீ ஏ. ராமசாமி முதலியார் இப்போது அரசியல் கட்சிகளைக் கடந்த உன்னத நிலையை அடைந்திருக்கிறார். அறிவாற்றல்களுடனே சமயப் பற்றும் ஆலய தரிசனத்தில் ஆர்வமும் ஆஸ்திக சிரத்தையும் உள்ளவர் ஸ்ரீ ஏ. ராமசாமி முதலியார் என்பதை இப்போது மக்கள் அறிந்து கொண்டிருக்கிறார்கள். சுதந்திர பாரத நாட்டுக்கு ஸ்ரீ ஏ. ராமசாமி முதலியார் அரும் பெரும் சேவைகளைச் செய்திருக்கிறார். இப்போது அவர் தேர்தலுக்கு நின்றால் எந்தத் தொகுதியிலும் போட்டியின்றி ஜயிக்கக் கூடியவராவார்.

# ஏமாற்றம் அடையாதீர்!

உண்மையில் பார்க்கப் போனால், உத்தியோகங்களுக்கு இப்போது போட்டி போடுவது அறிவீனமான காரியம் ஆகும்.

ஒரு காலத்தில் உத்தியோகங்களுக்கு மதிப்பு அதிகம் இருந்தது உண்மைதான். இது பிரிட்டிஷ் ஆட்சி நடந்த காலத்தில் ஏற்பட்டது. அப்போது 'தாசில்தார்' என்றால், பெரிய பெரிய மனிதர்கள் கூடப் பயபக்தியுடன் கையைக் கட்டிக் கொண்டு அணுகுவார்கள். டிப்டி கலெக்டர் என்றால், எமதர்மராஜனுக்கு இணையாகவே கருதுவார்கள்.

"உத்தியோகம் புருஷ லட்சணம்", "எங்கள் வீட்டுக்காரரும் கச்சேரிக்குப் போகிறார்" என்ற பழமொழிகள் அந்த நாளிலேதான் ஏற்பட்டன.

இப்போதெல்லாம் சர்க்கார் உத்தியோகங்களுக்கு அவ்வளவு மதிப்பும் இல்லை; வருமானமும் இல்லை. என். ஜி. ஓக்கள் என்று சொல்லப்படும் அடிப்படைச் சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் சமூகத்தில் ஒரு தாழ்த்தப்பட்ட பகுதியினராகவே வாழ்ந்து வருகிறார்கள்.

ஆயிரக் கணக்கில் பணம் செலவு செய்து படித்துப் பட்டம் பெற்றுப் பிரம்மப் பிரயத்தனங்கள் செய்து தாசில்தார் அல்லது டிபுடி கலெக்டர் உத்தியோகத்துக்கு வருகிறவரைக் காட்டிலும், உப்புப் புளி மிளகாயும் உருளைக் கிழங்கும் வெங்காயமும் விற்கும் வியாபாரி இந்த நாளில் அதிகமாகப் பணம் சம்பாதிக்கிறார்!

பிரிட்டிஷ் ஆட்சி நடந்த காலத்தில் சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்கு 'மேல் வரும்படி' என்பதாக ஓர் இனத்தில் வருமானம் கிடைப்பதுண்டு.

இந்தியா சுதந்திரம் அடைந்த பிறகு, சமீப காலம் வரையில் பலவகையான வர்த்தகக் கட்டுப்பாடுகளும், லைசென்ஸுகளும் அமுலில் இருந்தபடியால் சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் 'மேல் வரும்படி' சம்பாதிக்க இடம் இருந்தது.

இப்போது கண்ட்ரோல்கள் அநேகமாகப் போய்விட்டன! தானியக் கண்ட்ரோல் எடுபட்ட பிறகு ஏற்பட்ட நன்மைகளைக் கண்டுள்ள இந்திய சர்க்கார் மற்றத் துறைகளில் உள்ள சில்லறைக் கண்ட்

# தோற்றப் பொலிவுப் போட்டி!




ரோல்களைச் சீக்கிரத்தில் ரத்து செய்து விடுவார்கள் என்று எதிர்பார்க்கலாம். அப்படிச் சர்க்கார் முன்வந்து கண்ட்ரோல்களை எடுக்கா விட்டால், பொது மக்களே வற்புறுத்தி அவைகளை எடுக்கச் செய்து விடுவார்கள்.

ஆகவே, மாதச் சம்பளத்துடன் 'மேல் வரும்படி'யையும் எதிர்பார்த்துக் கொண்டு சர்க்கார் உத்தியோகங்களைத் தேடி அலைவோர் நிச்சயமாக ஏமாந்துதான் போவார்கள்.

* * *

இவ்வாறு எந்த நோக்கத்துடன் பார்த்தாலும், சர்க்கார் உத்தியோகங்களுக்குப் போட்டி போடுவது அறிவீனம் என்று ஏற்படுகிறது.

ஆனால், இதுவரையில் சர்க்கார் உத்தியோகங்களின் அந்தஸ்தை அனுபவித்து அறியாமலிருந்த வகுப்பினர் அந்த உத்தியோகங்களின் மீது இப்போது மோகங் கொள்வது இயல்பேயாகும். அவரவர்களும் உத்தியோகத்தை அடைந்து பார்த்து அதிலுள்ள ஏமாற்றங்களையும் அநுபவித்துப் பார்த்த பிறகுதான் "இவ்வளவுதானா!" என்று தெளிவு பெற முடியும்.

ஆகையால், இதுகாறும் சர்க்கார் உத்தியோகங்களையே அதிகமாக நம்பி வாழ்ந்த வகுப்பினர் இப்போது மற்றவர்களுக்கு இடங் கொடுத்து விட்டுத் தாங்கள் வேறு துறைகளை நாடவேண்டும் என்று நாம் கருதுகிறோம்.

'மேல் சாதியார்' என்று சொல்லப்பட்டு வந்தவர்கள், பிற்பட்ட வகுப்பாருக்குச் சர்க்கார் உத்தியோகங்களில் இடங் கொடுத்து விட்டு, வேறு ஜீவனத் துறைகளை நாட வேண்டும்.

முக்கியமாக, பிராமண சாதியில் பிறந்த வாலிபர்களுக்கு "அரசாங்க உத்தியோகங்களுக்குப் போட்டி போட வேண்டாம்!" என்று நாம் யோசனை சொல்கிறோம்.

இன்றைக்குப் புதிதாகச் சொல்லவில்லை; பல ஆண்டுகளுக்கு முன்னாலிருந்து சொல்லி வந்த யோசனையையே மீண்டும் கூறுகிறோம்.

தற்காலக் கல்விச் சாலைகளில் அளிக்கப்படும் சர்வ மௌடீகமான கல்வி முறையில் பயின்று எஸ். எஸ். எல். ஸி., இண்டர்மீடியட் அல்லது பி. ஏ. பரீட்சையில் தேறி வெளிவந்திருக்கும் வாலிபர்களுக்கு நம் யோசனை அவ்வளவாகப் பிடிக்காமல் இருக்கலாம்.

"குமாஸ்தா உத்தியோகம் ஒன்றுக்குத்தானே நாம் தயார் செய்யப்பட்டிருக்கிறோம்! சர்க்கார் உத்தியோகத்துக்குப் போகக் கூடாது என்றால், வேறு என்ன செய்வோம்!" என்று நம் வாலிப நண்பர்கள் திகைத்துத் திக்கற்று நிற்பார்கள். நிர்க்கதியான நிலையைத் தாங்கள் அடைந்து விட்டதாக எண்ணி உடல் குன்றி உள்ளச் சோர்வு அடைவார்கள்.

ஆனால், இறைவன் மனித சாதிக்கு அளித்திருக்கும் அறிவு அற்புதமானது; மகத்தானது. அதற்கு எவ்வளவுக்குத் தடை ஏற்படுகிறதோ அவ்வளவுக்குப் பிரகாசம் அடைகிறது.

மேட்டிலிருந்து பள்ளத்துக்கு ஓடி வரும் தண்ணீர்ப் பிரவாகத்துக்கு எங்கேயாவது தடை ஏற்பட்டால் அந்தத் தண்ணீர்ப் பிரவாகம் என்ன செய்கிறது! அங்கேயே நின்று விடுகிறதா! அப்பால் இப்பால் நகர்ந்து, அங்குமிங்கும் ஓடி அலைந்து, எங்கேயாவது வழி கண்டு பிடித்துக் கொண்டு மேலே போகத்தான் போகிறது.

அது போலவே அறிவு படைத்த மனிதன் தடைகளைக் கண்டு அஞ்சிவிட மாட்டான்; சோர்வு அடையவும் மாட்டான். அப்படிச் சோர்வு கொண்டாலும் சிறிது நேரத்துக்கு மேல் அச்சோர்வு நீடித்திராது. அவனுடைய அறிவு தடைகளைக் கடந்து செல்வதற்குப் பிரயத்தனம் செய்யும். அப் பிரயத்தனங்களின் போது அறிவு மேலும் தீட்சண்யமும் வன்மையும் அடையும்; வாழ்க்கையில் முன்னேறப் புதிய வழிகளைக் கண்டு பிடித்தே தீரும்.

தடங்கலில்லாத வழியில் செல்கிறவர்களைக் காட்டிலும் தடங்கல்களை முயற்சியினால் வென்று மேலே செல்கிறவர்கள் நிச்சயமாக வாழ்க்கையில் மகோன்னத நிலையை அடைவார்கள்.

ஆகையால், "சர்க்கார் உத்தியோகம் இல்லாவிட்டால் என்ன செய்வோம்!" என்று அறிவும்

# சமாதான தூதர்!




ஆஸ்திரேலியா வெளிநாட்டு மந்திரி ஸர் கேஸி டெல்லிக்கு வந்து நேருஜியுடன் உலக சமாதானத்துக்கான பல திட்டங்களைப் பற்றிக் கலந்தாலோசித்தார்.

---

ஹைக்கூடும் உள்ள வாலிபன் எவனும் ஏங்கித் திகைத்து நிற்க வேண்டியதில்லை.

** ** **

உத்தியோகப் போட்டியானது, இன்னும் சற்று கீழ்ப்படிகளில் இறங்கி, சிற்சில கலாசாலைகளில் இடம் பெறுவதற்குப் பெரும் போட்டியாகவும் உருக் கொள்வதைப் பார்க்கிறோம்.

சாதாரண பி. ஏ., எம். ஏ. பட்டதாரிகளை உற்பத்தி செய்து தள்ளும் கலாசாலைகளுக்குக் கூட முன்னொரு காலத்தில் போட்டி யிருந்தது. இப்போது அக்கலாசாலைகளில் சர்வ சாதாரணமாக எல்லாருக்கும் இடம் கிடைக்கிறது.

இப்போது உள்ள போட்டி யெல்லாம் பொறி இயல் கல்லூரி, வைத்தியக் கல்லூரி இவற்றில் இடம் பெறுவதிலேதான்.

என்ஜினியரிங், மெடிக்கல் காலேஜுகளில் படித்துத் தேர்ந்து விட்டால் உத்தியோகம் நிச்சயம் கிடைக்கும் என்ற நம்பிக்கையின் பேரில் இந்தப் போட்டி ஏற்பட்டிருக்கிறது.

இது தவறான நம்பிக்கை என்று நாம் கருதுகிறோம். இன்னும் ஐந்தாறு வருஷங்களுக்குள் எத்தனை என்ஜினியர்களும் டாக்டர்களும் பட்டம் பெற்று வெளி வருவார்கள் என்பதை எண்ணிப் பார்த்தால், அவர்கள் எல்லாருக்கும் உத்தியோகம் கிடைப்பது அவ்வளவு எளிதன்று என்பதைச் சந்தேகமற அறியலாம்.

இன்றைக்குக் கூட என்ஜினியரிங் கலாசாலைப் பட்டதாரிகள் பலர் உத்தியோகமின்றித் தவித்துக் கொண்டிருக்கிறார்கள்.

நம் கருத்து தவறா யிருந்து, என்ஜினியரிங் — டாக்டர் பட்டம் பெற்றவர்கள் அனைவருக்கும் கைமேல் உத்தியோகம் காத்திருப்பதாக வைத்துக் கொண்டாலும், பிராமண வகுப்பைச் சேர்ந்த வாலிபர்களுக்கு நம் யோசனை “மேற்படி கலாசாலைகளில் சேருவதற்குப் போட்டி போட வேண்டாம்!” என்பதுதான்.

இந்தக் கலாசாலைகளில் மாணவர்களைச் சேர்த்துக் கொள்வது பற்றிச் சென்னை சர்க்கார் சமீபத்தில் சில விதிகள் செய்திருக்கிறார்கள்.

பரீட்சைகளில் வாங்கி யிருக்கும் மார்க்குகளைத் தவிரத் தோற்றப் பொலிவு (பெர்ஸனாலிடி)க்காக 150 மார்க் கூடச் சேர்த்துத் தகுதியைத் தீர்மானிக்கப் போகிறார்கள்.

ஆள் உயரம், மார்பு அகலம், கை நீளம், உடம்பின் எடை, விளையாட்டுக்களில் தேர்ச்சி எல்லாவற்றையும் பார்த்துப் பொறுக்குக் கமிட்டியார் இந்த 150 மார்க்குகளையும் சேர்ப்பார்கள்.

“இம்மாதிரி விதிகள் அநியாயமானவை” என்று, அவற்றினால் பாதிக்கப்படுகிறவர்களுக்குத் தோன்றுவது இயல்பே.

இந்த விதிகளினால் நன்மையடைகிறவர்களோ, “இவற்றைப் போன்ற தர்ம நியாயமான விதிகள் உலகிலேயே இல்லை” என்று கருதுவார்கள்.

ஆகையால் முகவெட்டு, மார்பு அகலம், கை நீளம் முதலிய அநுகூலங்களைப் பெறாத வாலிபர்கள் “ஐயோ! இது என்ன அநியாயம்!” என்று ஓலமிட்டுக் கொண்டு சோர்ந்து உட்கார்ந்திருப்பதில் பயன் எதுவும் இல்லை.

அதைக் காட்டிலும், தங்கள் மனோபாவத்தை அடியோடு மாற்றிக் கொண்டு, வேறு துறைகளில் தங்கள் அறிவைச் செலுத்தி வாழ்க்கையில் வெற்றி அடைய முயல வேண்டும்.

“சர்க்கார் உத்தியோகமே கதி” என்ற மனப்பான்மையை விட்டொழிக்க வேண்டும்.

போட்டி யில்லாத உத்தியோகத் துறைகள் இருந்தால் பாருங்கள்; இல்லா விட்டால், விவசாயம், வியாபாரம், கைத்தொழில் முதலிய துறைகளில் கவனம் செலுத்துங்கள். சர்க்கார் உத்தி

யோகங்களினால் அடையும் நலன்களைக் காட்டிலும் பன்மடங்கு நன்மை அடைவீர்கள்.

அம்மாதிரியே, போட்டி அதிகமாயுள்ள கல்வி ஸ்தாபனங்களில் இடம் பெறுவதற்கு ஆசைப்பட்டு ஏமாற்றம் அடையாதீர்கள்.

வைத்தியக் கல்லூரியிலோ, பொறி இயல் கல்லூரியிலோ படித்துப் பட்டம் பெறுவதற்கு நீங்கள் செலவழிக்கப் போகும் பணத்தை மூலதனமாகக் கொண்டு விவசாயம், வர்த்தகம் அல்லது தொழில் துறைகளில் ஈடுபடுங்கள். அறிவைச் செலுத்தி உழைத்துப் பாடுபட்டால் வாழ்க்கையில் பன்மடங்கு அதிக வெற்றி அடைவீர்கள்.

அத்துடன், தெய்வத் தமிழ் நாட்டில் துவேஷப் பிரசாரங்கள் மலிந்து மக்களின் உள்ளங்களைக் கெடுத்து நாட்டின் முன்னேற்றம் தடைப்படுவதற்குரிய முக்கிய காரணமாயிருந்து வரும் உத்தியோகப் போட்டியை ஒழிப்பதற்கும் உதவி செய்தவர்களாவீர்கள்.

# ஒரு மார்க்கினால் உடைந்த உள்ளம்!

உதக மண்டலத்தின் குளிர்ந்த சூழ்நிலையில் கூடி, எஸ். எஸ். எல். ஸி. தேறியவர்களின் தொகையை 100-க்கு 49-லிருந்து 100-க்கு 56 ஆக உயர்த்திய புண்ணியவான்கள் இன்னும் ஒரு துறையில் தங்கள் தாராளத் தன்மையைக் காட்டியிருக்கக் கூடாதா! ஒரு மார்க்குக் குறைவினால் ஒரு மாணக்கன் தேறவில்லை என்ற கொடுமையான நிலைமை ஏற்படாமல் பார்த்திருக்கக் கூடாதா! தயவுசெய்து பின்வரும் கடிதத்தைப் படித்துப் பாருங்கள் :—

"நான் எஸ். எஸ். எல். ஸி. எழுதித் தவறிய மாணவர்களில் ஒருவன். நான் தவறியதற்குக் காரணம் ஒரே மார்க். எனது மார்க் லிஸ்டைக் கொஞ்சம் கவனியுங்கள்.

முதல் மொழி தமிழில் முதற்பகுதி 59; இரண்டாம் பகுதி 47; கணக்கில் 56; சமூக நூலில் 55; விஞ்ஞானம் 51. அயலான் மொழியாயினும் ஆங்கிலத்தை விரும்பித்தான் படித்தேன். ஆனால் எனது விடைகளைத் திருத்திய கொடை வள்ளலின் எழுதுகோலினால் 'மார்க் 34' என்று எழுதப்பட்டு விட்டது. இது இன்று எனது தலைவிதியையே மாற்றும் அளவுக்கு முக்கியத்துவம் ஆகிவிட்டது.

எண்ணிப் பாருங்கள்! மற்றெல்லாப் பாடங்களிலும் ஐம்பதுக்கு மேல் வாங்கியுள்ளேன். ஆனால் நான் தேறுவதற்கு வேண்டியது ஆங்கிலத்தில் ஒரே மார்க். இதற்காக எனது பொன்னான இளமையின் ஓராண்டு காலத்தை என் தலைவிதியை நிர்ணயித்த புண்ணியவாளர்களின் திருப் பாதங்களில் சமர்ப்பித்து விடவேண்டும்.

மேற்கொண்டு செலவு செய்து படிக்கக் குடும்ப நிலை இடந் தரவில்லை. ஒரு மார்க்கினால் எனது எதிர் காலத்துக்கே முற்றுப்புள்ளி வைத்தாகி விட்டது. வளமாக்க வேண்டிய இப் படிப்பு என் வாழ்வுக்குச் சவக் குழி தோண்டுகிறது. என் தலைவிதியை நிர்ணயித்த அக் கலியுக பிரம்மாக்கள் மற்றப் பாடங்களில் உள்ள எனது திறமையைக் கண்டாவது தேர்த்து விட்டிருக்கக் கூடாதா!

பகல் முழுதும் இதே சிந்தனைதான். இரவெல்லாம் இந்த ஒரு மார்க் மரத்தின் உருக்கொண்டு என் கழுத்துக்குக் கயிறு கட்டுகிறது. ரயில் மூன் தலைகொடுக்கும் என் சக மாணவர்கள் நிலைமைக்கு இன்னும் வராவிட்டாலும் என் இளமையின் இன்பகரமான ஓராண்டை வீணாக்க வைத்த அப் பிரம்மாக்களுக்கு எனது நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

கோவை
12—6—54

ராமச்சந்திரன்."

பரீட்சையில் தேர்வுக்கு 35 மார்க்குகள் அவசியம் என்று இருக்கும் போது, ஒரே ஒரு மார்க் குறைவாக 34 என்று போடும் வினாத்தாள் பரிசோதகர்களைக் கம்ஸன் முதலான அரக்கர் இனத்துடனேதான் சேர்க்க வேண்டும். பொற்கொல்லர்கள் தங்கத்தை நிறுப்பது போல் அவ்வளவு கணக்காக நிறை போட்டு அளந்தா அவர்கள் மார்க்குப் போடுகிறார்கள்! ஒரு மார்க்குக் கூட்டிப் போட்டால் அவர்களுக்கு என்ன நஷ்டம் நேர்ந்து விடும்! அதற்கு விருப்பம் இல்லா விட்டால், நாலு மார்க்குக் குறைத்து 30 என்றாவது போட்டுத் தொலைப்பதுதானே! ஓர் இளம் பிள்ளை தனக்கு இழைக்கப்பட்ட அநீதியைப் பற்றி நினைத்து வாழ்க்கையெல்லாம் கசந்து வெறுப்புக் கொள்ளும்படி ஒரு மார்க்குக் குறைவாக ஏன் போட வேண்டும்!

வினாத்தாள் பரிசோதகர் இத்தகைய லோபித்தனமும் அரக்க குணமும் படைத்தவராயிருந்தாலும், தாராள உள்ளத்துடன் பரீட்சை மார்க்குகளைச் சத விகிதத்தில் கூட்டிப் போட்டு ஆயிரக் கணக்கான மாணக்கர்கள் தேறும்படி செய்த புண்ணியவாளர்களாவது இந்த அநீதிக்கு ஒரு பரிகாரம் கண்டிருக்கக் கூடாதா!

# பரீட்சை பூதத்துக்கு நூதன பலி!

பரீட்சை 'ஸீசன்' முடிந்து பரீட்சை முடிவுகள் வெளியாகி விட்டன. வழக்கம்போல் அதை அடுத்துத் தற்கொலை 'ஸீசன்' ஆரம்பமாகி விட்டதோ என்று அஞ்ச வேண்டியிருக்கிறது. ஒவ்வொரு வருஷமும் பரீட்சை முடிவுகள் தெரிந்த பின் அத்தகைய சம்பவங்கள் நடைபெறுவது, அதாவது தற்கொலை நோய் தலைகாட்டுவது மிகவும் பரிதபிக்கத் தக்கது.

இந்த வருஷத்தில் இதற்கு முன் ஒரு போதும் நடந்திராத விபரீதம் நிகழ்ந்திருக்கிறது. பரீட்சையில் தேறவில்லை என்பதற்காக இதற்கு முன் மாணவர்கள் மனம் உடைந்து, வாழ்க்கையை வெறுத்துத் தற்கொலை புரிந்து கொண்டது பற்றிய செய்திகளைக் கேட்டிருக்கிறோம். அடிக்கடி இச் செய்திகளைக் கேட்டு 'இது இயற்கைதான்' என்று பலர் அசட்டை செய்யும்படியும் ஆகிவிட்டது. ஆனால் மதுரையில் அறுபது வயதான கப்பா நாயுடு என்பவர் தமது மகன் இண்டர் மீடியட் பரீட்சையில் இரண்டாவது முறையும் தவறி விட்டதற்காகத் தூக்குப் போட்டுக்கொண்டு மாண்டார் என்று சில தினங்களுக்கு முன் வெளியான செய்தி எவரையும் திடுக்கிடச் செய்யும். பரீட்சையில் தவறிய மகனுக்கு ஆறுதல் வார்த்தை கூறி உற்சாகப்படுத்த வேண்டிய தந்தையே, கேவலம் மேற்படி காரணத்துக்காகத் தமது உயிரையே மாய்த்துக் கொண்டாரெனில், அது

சமூகத்தையே கலங்க வைக்கும் சோகம் நிறைந்த சம்பவம் அல்லவா!

சென்னை ராஜ்யத்தில் மாத்திரம் இந்த வருஷம் எஸ். எஸ். எல். ஸி. பரீட்சைக்கு எழுதிய 53,000 மாணவர்களில் 29,690 பேர் அதாவது 56 சத விகிதம் மாணவர்கள் தேறியதாகக் கூறப்படுகிறது.

முதலில் எடுத்த கணக்குப்படி, பரீட்சைக்கு எழுதியவர்களில் 49 சத விகித மாணவர்கள்தான் தேறியிருந்தார்களாம். ஆனால், உதக மண்டலத்திலே குளிர்ந்த சூழ்நிலையில் கூடிய மாடரேஷன் போர்டார் அதை 56 சத விகிதமாக உயர்த்தினார்களாம். எனவே அந்த போர்டாரின் முயற்சியினால் மேற்கொண்டு சுமார் 4000 மாணவர்கள் தேறுவதற்கு வழி பிறந்தது. மாடரேஷன் போர்டார் நன்றாக இருக்கட்டும்!

இந்த வருஷம் எஸ். எஸ். எல். ஸி. பரீட்சையில் தேறாத 23,320 மாணவர்கள் மனம் உடைந்து வாழ்க்கையில் வெறுப்பும் கொண்டு விட்டால், சமூகம் உய்வது எப்படி!

பரீட்சையில் தேறுவதும் உத்தியோகம் பார்ப்பதும்தான் வாழ்க்கையின் இலட்சியங்கள் என்ற மனப்பான்மையையே இது போன்ற சம்பவங்கள் காட்டுகின்றன. வாழ்க்கையில் மிகப் புனிதமான உயர்ந்த இலட்சியங்களை நிறைவேற்ற வேண்டிய மனிதர்களிடையே பரீட்சை தேறுவதும் உத்தியோகம் ஏற்படுவதும்தான் பிறப்பின் பலன் என்ற மனோபாவம் மாற வேண்டும். இந்த மாறுதல் ஏற்படுவதற்குச் சமூக நலனில் அக்கறை கொண்ட எல்லாரும் பாடுபட வேண்டும்; இடைவிடாமல் பிரசாரம் செய்து வர வேண்டும்.

# உணவுப் பஞ்சம் ஒழிந்தது!

**நா**டெங்கும் தானிய லக்ஷ்மி மலர்ந்த முகத்துடன் பொலிந்து விளங்குகிறாள். நெல், கோதுமை, சோளம் முதலிய தானியங்கள் எங்கும் தாராளமாகக் கிடைக்கின்றன. வேண்டியோர் வேண்டிய அளவு வாங்கிக் கொள்ளலாம். விலைகளும் இறங்கு முகமாக இருந்து வருகின்றன. தானியப் பற்றாக்குறை அடியோடு தீர்ந்து விட்டது. உணவுப் பஞ்சம் அடியோடு ஒழிந்து விட்டது.

"இந்த வருஷத்தில் 'பட்டினி' என்ற பேச்சே மேற்கு வங்காளத்தில் எங்கும் கேட்கப்படவில்லை" என்று அந்த இராஜ்யத்தின் உணவு மந்திரி நாலு நாளைக்கு முன்பு கூறினார்.

பம்பாய் இராஜ்யத்தில் ஐந்து பெரிய நகரங்களில் மட்டும் மாதப் பங்கீடு முறை அமுலில் இருந்து வந்தது. அதையும் சென்ற மாதத்தில் ஒழித்து விட்டார்கள்.

மத்திய மாகாணத்திலும் ஒரிஸ்ஸாவிலும் ஏற்றுமதிக்கு ஏராளமான நெல் இருந்து வருகிறது.

ஆந்திர இராஜ்யத்தின் மந்திரிகள் அந்த இராஜ்யத்தில் விளையும் உபரி நெல்லை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்து விற்க அநுமதி கோருகிறார்கள்.

சென்னை இராஜ்யத்தில் இதுவரை இருந்து வந்த மண்டலப் பிரிவினை அடுத்த மாதம் முதல் தேதியிலிருந்து எடுபட்டு விடும் என்று நம் உணவு மந்திரி ஸ்ரீ சுப்பிரமணியம் தெரிவித்திருக்கிறார்.

சர்க்கார் சார்பில் கொள் முதல் செய்வதற்கு இனி அவசியமிராது என்றும், தஞ்சையில் நெல் விலை இறங்கி வருகிறதென்றும், அதனால் கம்யூனிஸ்டுகள் 'உற்பத்தியாளருக்குத் தக்க விலை' கோரிக் கிளர்ச்சி தொடங்கியிருக்கிறார்கள் என்றும் கூறுகிறார்.

ஐந்து வருஷத் திட்டக்காரர்கள் போட்ட திட்டங்களில் உருப்படியாக நிறைவேறியிருப்பது உணவு உற்பத்தி அதிகமாகியிருப்பது ஒன்றுதான்.

ஐந்து வருஷங்களில் விவசாயத்துக்காகவும் நீர்ப்பாசனத்துக்காகவும் செலவு செய்ய உத்தேசித்திருந்த தொகையில் 100க்கு 53 விகிதம்தான் இதுவரை செலவழித்திருக்கிறார்கள். ஆயினும், இதற்குள்ளேயே உணவுப் பற்றாக்குறை தீர்ந்து விட்டதன் காரணம் என்ன!

இரண்டு வருஷத்துக்கு முன்னால் சென்னையில் ராஜாஜி சர்க்கார் உணவுக் கண்ட்ரோலை ஒழிக்கத் தைரியமாக முன்வந்ததுதான் காரணம் என்பது பகிரங்க இரகசியம்.

அப்போது ஐந்து வருஷத் திட்டம் போட்டவர்கள் உணவுக் கண்ட்ரோலை எடுப்பதற்குப் பெரும் எதிர்ப்புச் செய்தார்கள். "உணவுக் கண்ட்ரோலை எடுத்தால் ராஜினாமா செய்து விடுவோம்" என்று கூடப் பயமுறுத்தியதாக வதந்தி உலாவியது. இவ்வாறு பயமுறுத்தியவர்களில் நிதி மந்திரி தேசமுக்கும் ஒருவர் என்று சொல்லப்பட்டது.

தேசத்தின் அதிர்ஷ்டவசத்தினால் பிரதம மந்திரி நேருவும் உணவு மந்திரி கித்வாயும் சென்னை மந்திரி சபையின் யோசனையைப் பிடிவாதமாக ஆதரித்து நின்றபடியால் உணவுக் கண்ட்ரோல் எடுக்கப்பட்டது. சென்னையின் உதாரணத்தைப் பின்பற்றி மற்றும் பல இராஜ்யங்களிலும் உணவுக் கண்ட்ரோலை நீக்கினார்கள்.

உடனே, நாடெங்குமுள்ள விவசாயிகளிடையே பத்து வருடங்களாக இல்லாத ஒரு தனி உற்சாகம் கிளர்ந்தோங்கியது.

"நாம் விளைவிக்கும் தானியத்தை நம் இஷ்டம் போல் வைத்துக் கொள்ளலாம்; அல்லது விற்கலாம்" என்ற நம்பிக்கை ஏற்பட்டவுடன், விவசாயிகள் முன்னைக் காட்டிலும் மும்மடங்கு ஊக்கத்துடன் பாடுபட்டார்கள்; பலனைக் கண்டார்கள். நாடும் நன்மை அடைந்தது.

உணவுக் கண்ட்ரோலை மட்டும் அச்சமயம் எடுத்திரா விட்டால், இன்னமும் நாட்டில் உணவுப் பற்றாக்குறை இருந்து கொண்டுதானிருக்கும். அதிகார வர்க்கத்தார் உணவுப் பற்றாக்குறையை நிலைநிறுத்தி ஜனங்களின் தொல்லையை அதிகப்படுத்திக் கொண்டிருப்பார்கள்.

ஐந்து வருஷத் திட்டத்தின்படி கோடிக் கணக்கான ரூபாய்கள் விவசாய அபிவிருத்திக்காகச் செலவாகிக் கொண்டேயிருக்கும்.

நூறு ரூபாய் மூலதனமில்லாத அன்னியக் கம்பெனியிடம் பல லட்சம் ரூபாய் பெறுமான கருவிகளுக்கு ஆர்டர் கொடுப்பதும், அவ்வளவும் நஷ்டமாகப் போவதும் நடந்து கொண்டிருக்கும்.

கோடிக் கணக்கான ரூபாய்களுக்கு அயல் நாட்டு இயந்திரக் கலப்பைகளை (டிராக்டர்களை) வரவழைத்து, அவை ஒரு பயனுமில்லாமல் எங்கேயாவது தூங்கிக் கொண்டிருக்கும்; அல்லது சாலையோடு போய்க் கொண்டேயிருக்கும்

இதையெல்லாம் ஐந்து வருஷத் திட்டம் போட்டவர்கள் இப்பொழுதாவது சிறிது யோசித்துப் பார்த்தார்களானால் மிக்க நன்மை விளையும்.

உற்பத்திக்குத் திட்டம் போடுவதும், அதற்காக லட்சக் கணக்கிலும் கோடிக் கணக்கிலும் பணம் செலவு செய்வதும் மட்டும் போதாது.

போட்ட திட்டங்கள் காரியத்தில் நிறைவேறுவதற்கு வேண்டிய சூழ்நிலையை முதலில் நாட்டில் உண்டு பண்ண வேண்டும். குறிப்பிட்ட திட்டங்களில் மக்கள் உற்சாகத்துடன் ஈடுபடுவதற்கு அவசியமான காரியங்களைச் செய்ய வேண்டும்.

மதராஸ் மெஸர்ஸ் என். தேசாய் கவுண்டர் & கம்பெனியைச் சேர்ந்த
ஸ்ரீ சி. எஸ். ராமய்யா கவுடரின் குமாரர்

## சி. ஆர். ராமச்சந்திர கவுடர்

10-6-1954 வியாழக்கிழமை முதல்

# ஆர். எல். கவுடர் & கோ.

என்ற பெயரில்

தமது வியாபார ஸ்தாபனத்தை ஆரம்பித்திருப்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்வதோடு, அனைவரது ஆதரவையும் கோருகிறார்

★

சகலவிதமான ஷாப் சாமான்கள், பேடண்ட் மருந்துகள் டாய்லட் சாமான்கள் முதலியவை விற்பனை செய்யப்படுகின்றன

★

விலாஸம் : **59, பந்தர் தெரு - - சென்னை-1**
(சைனபஜாரிலிருந்து பந்தர் தெருவில் நுழைந்த உடனேயே இருக்கிறது)
போன் : 2120 தந்தி : "GOWDER"

---

மாணவ மாணவிகளுக்கு மகிழ்ச்சியளிக்கும் செய்தி

# "லோடஸ் பிராண்டு" சிலேட்டுகள்




உயரிய தயாரிப்பு
உறுதியானவை

○●○

எமது விசேஷ விநியோகஸ்தர்கள்:

மதராஸ் நகரம் பூராவும்:
திருவல்லிக்கேணி அர்பன் கோவாபரேடிவ் சொஸைடி லிமிடெட்.

*

சேலம் ஜில்லா:
சேலம் கோவாபரேடிவ் ஹோல்சேல் ஸ்டோர்ஸ் லிமிடெட்

*

மைசூர் ஸ்டேட்:
மைசூர் ப்ரோவின்ஷியல் கோவாபரேடிவ் மார்கெடிங் சொஸைடி லிமிடெட்

ஏஜன்ஸி விவரங்களுக்கு எழுதவும்:

## Madras Slate Manufacturing Company

583, TRIPLICANE HIGH ROAD :: MADRAS-5




அன்னதானசிவன் அநாதை மாணவர் இல்லத்து மாணவர்கள்

ஜூன் மாதம் ஆறாம் தேதி; ஞாயிற்றுக் கிழமை. காலை மணி ஏழு இருக்கும். காலை இளஞ் சூரியனின் தன் ஒளி மாயூர மாநகரத்தையே பரிசுத்த மாக்குவது போலிருந்தது.

எங்கிருந்தோ இனிமையான நாதஸ்வர இசை காற்றிலே மிதந்து வந்தது. அமிழ்தினும் இனிய அந்த நாதஸ்வர இசை பிறந்து வரும் இடத்தை நோக்கி விரைந்து சென்றேன்.

மாயூரம் கொரநாடு சுந்தரம் டாக்கீஸுக்கு எதிரில் அலங்கரித்த யானைமீது அன்னதானசிவன் திருஉருவப்படம் வைத்திருந்தது. அந்தப் படத்துக்கு மாலைகள் சூட்டி யிருந்தனர். அங்கே சுமார் ஆயிரம் பேர் கூடியிருந்தனர். வாலிபர்களும், பெரியவர்களும், பெண்மணிகளும், குழந்தைகளுமாகப் பெருங் கூட்டம் கூடியிருந்தனர். கூட்டத்தில் உணர்ச்சி நிறைந்து இருந்தது. அதன் மத்தியில் திருவாவடுதுறை திரு டி. என். ஆர். நடராஜசுந்தரம் (கக்காயி) கம்பீரமாக நின்று நாதஸ்வரம் வாசித்துக் கொண்டிருந்தார். அங்கு கூடியிருந்த மக்கள் மனத்தில் அமைதியான இன்பத்தை அளித்துக் கொண்டிருந்தது நாதஸ்வர இசை. நாதஸ்வர இசையை அனுபவித்துக் கொண்டே அன்னதான சிவன் பெருமையை அறிந்தவர்கள் யானைமீது இருந்த சிவன் திரு உருவப்படத்தைப் பார்த்துக் கொண்டிருந்தனர்.

வயது சென்ற உருவம்; மெலிந்த உடல்; இடையில் முழங்காலுக்கு மேலே இறுக்கிக் கட்டிய நூலைக் கச்சம்; விலா எலும்புகள் எல்லாம் தெரியும் மார்பு; க்ஷவரம் கூடப் பண்ணப்படாத முகம்; கையிலே நீண்ட கழி. இந்தக் கோலத்துடன் அமர்ந்திருந்தார் அன்னதான சிவன்.

அன்னதான சிவனுக்கென்று சொந்தமான பொருள் இந்த உலகில் ஒன்றுமே இல்லை. ஒரு அடி நிலம் கூடக் கிடையாது; ஒரு செப்புக்காசு கூடக் கிடையாது. ஊர் ஊராகச் சென்று பிறரிடம் யாசகம் வாங்கித்தான் அன்னதானம் செய்தார். அற்ப சொற்பமான அன்னதானம் அல்ல. அவருடைய வாழ்நாளில் சுமார் ஐம்பது லட்சம் பேருக்குமேல் சமாராதனை நடத்தி யிருக்கிறாராம். யானைமீது அலங்கரித்து வைத்திருந்த அப் பெரியாரின் திரு உருவப் படம் யானையை விட மிகப் பெரிய உருவமாக எனக்குத் தோன்றியது.

"அன்னதான சிவன் நாமம் வாழ்க! வாழ்க!" என்ற கம்பீரமான கோஷம் கேட்டது.

பல இளம் குரல்கள் ஆனந்த வெறியுடனே அந்தக் கோஷத்தை எதிரொலி செய்தன.

அம்மா சத்திரத்தில் அன்னதான சிவன் சங்கத்தார் நடத்தும் அநாதை மாணவர் இல்லத்து மாணவர்கள் அன்னதான சிவன் திரு உருவப் படத்தைத் தாங்கி நிற்கும் யானைக்கு முன்னும் இருமருங்கிலும் அணிவகுத்து நின்றார்கள். காக்கிக் கால் சட்டையும் மேல் சட்டையும் அணிந்து இளம் இராணுவ வீரர்கள்போல் கம்பீரமாக நின்று கொண்டிருந்தார்கள். அந்த இளம் முகங்களிலேதான் என்ன குதூகலம்! இப்படிக் குதூகலம் தவழும்படி அந்த ஆதரவற்ற மாணவர்களை வளர்த்துக் கல்விபயிற்றி வரும் அன்னதான சிவன் சங்கத்தாரை வாழ்த்தினேன்.

ஊர்வலம் மேலே செல்லச் செல்லக் கூட்டம் மேலும் மேலும் வந்து சேர்ந்து கொண்டிருந்தது. இப்போது குடந்தை திரு என். எஸ். ராஜன்னு நாதஸ்வரம் வாசித்துக் கொண்டிருந்தார். நாதஸ்வர இசை கம்பீரமாக இசைந்து இனிமையாக ஒலித்துக் கொண்டிருந்தது. இசை பொங்கிப் பெருகி மக்களை ஆட்கொண்டது.

இப்படியாக நாதஸ்வர இசையுடன் வந்த ஊர்வலம் எதிலோ மோதிக் கொண்டு நின்றது போல் சட்டென்று நின்றது. திடீர் என்று ஏற்பட்ட இந்தத் தேக்கத்தைத் தெரிந்து கொள்ள எனக்கு ஆசை உண்டாயிற்று.

அருகில் இருந்த அன்னதான சிவன் காரிய தரிசியை நோக்கி "ஏன் இப்படிக் கூட்டம் நெருக்குகிறது!" என்று கேட்டேன்.

"சிவன் விழாப் பந்தலை நெருங்கி விட்டோம். அதனால்தான் இந்த நெருக்கடி" என்றார்.

** ** **

அன்னதானசிவன் விழாக் கொட்டகைக்குள் ஜனங்கள் நெருக்கி அடித்துக் கொண்டு அமர்ந்திருந்தனர். தஞ்சை ஜில்லாவைச் சேர்ந்த பல பிரமுகர்கள் வந்திருந்தனர். சென்னை நகரிலிருந்து சில பிரமுகர்கள் வந்திருந்தனர். குடந்தை கஸ்தூரிபா மாதர் சங்கத்துப் பெண்மணிகள் வந்திருந்தனர். விழா மேடையின் வலது புறத்தில் அன்னதான சிவன் திருஉருவப் படத்தை மலர் மாலைகளால் மிக அழகாக அலங்கரித்து வைத்திருந்தனர். படத்துக்குச் சமீபத்தில் விழாத் தலைவர்களின் பெரிய மேஜை இருந்தது. அதன் மீது சுத்தமான கம்பளம் விரிக்கப்பட்டிருந்தது.

அங்கே வீசிய ஊதுவத்தி, புஷ்பங்கள் ஆகியவைகளின் சுகந்த மணம் இறைவன் உறைவிடங்களை நினைவூட்டிக் கொண்டிருந்தன.

விழா மேடைக்கு விழாத் தலைவர் ஸ்ரீ வி. பாஷ்யம் அய்யங்கார், மந்திரி கனம் பரமேஸ்வரன், வரவேற்புக் கமிட்டித் தலைவர் ஸ்ரீ மருதவாணம் பிள்ளை எம். எல். ஸி. ஆகியவர்கள் அழைத்து வரப்பட்டனர். அவர்கள் தங்கள் ஆசனங்களில் அமர்ந்ததும் அன்னதான சிவன் மாணவர் இல்லத்து மாணவர்கள் பிரார்த்தனை கீதம் பாட ஆண்டு விழா ஆரம்பமாகியது.

ஸ்ரீ ஸி. மருதவாணம் பிள்ளை அவர்கள் வரவேற்புக் கமிட்டித் தலைவராக இருந்து மிகுந்த உற்சாகத்துடன் பணி ஆற்றியதே இந்த விழா இவ்வளவு சிறப்பாக நடந்ததற்கு முக்கிய காரணம் என்று சொல்ல வேண்டும்.

தஞ்சை ஜில்லா பெருங்குடி மக்களில் ஸ்ரீ மருதவாணம் பிள்ளை ஒருவர். பெரிய மிராசுதார்; கள்ளங்கபடு அறியாதவர். தாய்நாட்டின் சுதந்திர இயக்கத்துக்கு ஆதரவு தரும் முறையில் முப்பது ஆண்டுகளுக்கு முன்பே காங்கிரஸில் சேர்ந்தவர்; கதர் இயக்கத்தில் பற்றுக் கொண்டவர்; காந்தி மகானிடம் பக்தி பூண்டவர். அவரிடம் நெருங்கிப் பழகியவர்களுக்கு அவருடைய உள்ளத்தின் விசாலமும் பெருந்தன்மையும் நன்கு தெரியும்.

ஸ்ரீ மருதவாணம்பிள்ளை அவர்கள் அன்னதான சிவன் பணிகளையும், அன்னதானத்தின் சிறப்பையும் பல கோணங்களில் இருந்து எடுத்துக் காட்டினார். சேர மன்னன் சேரலாதன் நாடுவிட்டுச் சென்று குருக்ஷேத்திரப் போர்க்களத்தில் உள்ள அனைவருக்கும் அன்னம் வழங்கினான். அதனால் பெருஞ்சோற்றுச் சேரலாதன் என்று அழியாப் புகழ் கொண்டான். அன்னதானம் சிவனும் மக்கள் கூடும் இடங்களுக்கெல்லாம் சென்று அன்னம் வழங்கினார். இன்று பெருஞ் சோற்றுச் சிவன் என்று சிறப்புப் பெயர் பெற்று விளங்குகிறார். அந்தப் பெரியாருக்குப் பெருமையுடன் நாம் திருநாள் கொண்டாடுகிறோம் என்றார்.

"நல்ல காரியங்கள் பெரிய நோக்கங்களுடன் சிறப்பாகவே ஆரம்பிக்கப் படுகின்றன. ஆனால் நாளடைவில் அவைகளில் உற்சாகம் குறைந்து விடுகின்றன. அப்படி இல்லாமல் அன்னதான சிவன் பணிகளை உற்சாகம் குறையாமல் நடத்தி வரவேணும்" என்று கூறி விழாவைத் துவக்கி வைத்தார் மந்திரி கனம் பரமேஸ்வரன். அன்னதான சிவன் பணிகள் சாதிமத வித்தியாசமின்றி நடைபெறுவதைப் பாராட்டினார். நல்ல காரியங்கள் நடத்துவதிலும், அதற்காகப் பொருள் சேகரிப்பதிலும் உள்ள கஷ்டங்களைக் குறிப்பிட்டுத் தம்முடைய அநுபவத்தில் ஏற்பட்ட ஒரு ரஸமான சம்பவத்தைச் சொன்னார்.

தேசபக்தர் ஒருவரின் ஞாபகார்த்தமாக ஏதாவது செய்ய வேண்டும் என்று நிதி திரட்ட முயன்றார்களாம். ஸ்ரீ பரமேஸ்வரனும் அவர் சகாக்களுமாகப் பெரிய மனிதர்கள் பலரிடம் சென்று விஷயத்தைக் கூறிப் பொருள் உதவி கோரினார்களாம். "நாளைக்குத் தருகிறேன்" என்றாராம் ஒருவர். என் பெயரில் இவ்வளவு தொகை எழுதிக் கொள்ளுங்கள் என்றாராம் இன்னொருவர். "கடைசியில் துண்டு விழும் தொகையை நான் கொடுத்து விடுகிறேன்" என்றாராம் இன்னொரு பிரமுகர். மிகச் சிரமப்பட்டு நாற்பத்தைந்து ரூபாய்தான் வசூல் ஆயிற்றும். அதற்காகச் செலவழித்த பெட்ரோலுக்கோ நூறு ரூபாய் கொடுக்க வேண்டியிருந்ததாம். இதைப் பார்த்தவுடன் அந்தத் தேச பக்தரின் ஞாபகார்த்தம் எப்படியாவது ஆகட்டும் என்று தீர்மானித்து வசூல் ஆன நாற்பத்தைந்து ரூபாயையும் கொடுத்தவர்களிடமே திருப்பிக் கொடுத்து விட்டாராம்!

இந்தச் சம்பவத்தைச் சொல்லும்போது சபையோர் கலகல வென்று சிரித்தனர். ஆயினும் அவர்களுடைய உள்ளங்கள் உண்மையாகப் பொது நலத் தொண்டு செய்வது எவ்வளவு சிரமமானது என்பதை எண்ணி அநுதாபப்பட்டுக் கொண்டிருந்தன.

பின்னர் விழாத் தலைவர் ஸ்ரீ பாஷ்யம் ஐயங்கார் தலைமையுரை நிகழ்த்தினார். நீண்ட காலமாக ஹரிஜனங்களுக்குத் தொண்டாற்றி வருவதின் மூலம் (திவான் பகதூர்) ஸ்ரீ வி. பாஷ்யம் அவர்களுக்கு "ஹரிஜன் ஐயங்கார்" என்னும் ஒரு சிறப்புப் பெயரும் உண்டு. காந்தி மகானுக்கு



வரவேற்புக் கமிட்டித் தலைவர் திரு ஸி. மருதவாணம் பிள்ளை எம். எல். ஸி. வரவேற்புரை நிகழ்த்துகிறார். அவருக்கு அருகில் திரு பாஷ்யம் ஐயங்காரும், கனம் பரமேஸ்வரனும் அமர்ந்திருக்கின்றனர்.



அன்னதானம் நடந்து கொண்டிருக்கிறது

உகந்த தேமாகிய "வைஷ்ணவ ஜனதோ தேனே கஹியே!" என்று தொடங்கும் பாடலில் உண்மையான வைஷ்ணவனுக்கு உரிய குணங்களை எல்லாம் விவரித்திருக்கிறதல்லவா! அந்தக் குணங்களை எல்லாம் பூரணமாகப் பெற்றுத் தொண்டு வாழ்க்கை நடத்தி வரும் ஸ்ரீ வி. பாஷ்யம் அய்யங்கார் இந்த விழாவுக்குத் தலைமை தாங்கியதன் மூலம் விழாவின் சிறப்பு மேலும் உயர்ந்தது என்று சொன்னால் மிகையாகாது.

ஸ்ரீ பாஷ்யம் ஐயங்கார் தாம் குடந்தையில் நீதிபதியாக இருந்த போது ஒரு நாள் ஓர் அதிசயத்தைப் பார்த்தாராம். தாம் வசித்து வந்த வீட்டுக்கு எதிரில் சின்னக் குன்று போல எச்சில் இலைகள் குவிந்து கிடந்த காட்சியைப் பார்த்து வியந்து போனாராம். அங்கிருந்தவர்களைப் பார்த்து யார் இப்படி சமாராதனை செய்தது என்று விசாரித்தபோது அன்னதான சிவன் செய்த சமாராதனை என்றார்களாம். இதைக் கேட்டதும் அப்படியே மூக்கில் விரலை வைத்துத் திகைத்து நின்று விட்டாராம். இந்த நிகழ்ச்சியை உணர்ச்சியுடன் அவர் கூறிய போது அந்தப்பெரிய சபையில் உள்ள ஒவ்வொருவர் முகத்திலும் வியப்புக் குறி நன்றாகத் தெரிந்தது.

"அன்னதான சிவன் யாரைப்போய் எதைக் கேட்டாலும் 'இல்லை' என்று சொல்லாமல் கொடுப்பார்கள். 'இல்லை' என்பதற்கு இடம் இல்லாமல் தகுதி அறிந்து, தரம் அறிந்து கேட்பார். நீங்கள் இருபது மூட்டை அரிசி கொடுங்கள். நீங்கள் பத்து மணங்கு புளி அனுப்புங்கள் என்று பொருள்களாகவே கேட்டுச் சேகரிப்பார். கிடைத்தது அனைத்தையும் சரிவரப் பயன்படுத்தி மக்களுக்கு உணவளிப்பார். இதையெல்லாம் நான் நேரிலேயே பார்த்திருக்கிறேன்" என்று தேப்பெருமாள் நல்லூர் அன்னதான சிவனுடைய அற்புத வாழ்க்கையில் தாம் கண்ட சில ரஸமான சம்பவங்களை மிகவும் அழகாக எடுத்துச் சொன்னார்.

அன்னதானத்தின் சிறப்பையும், அன்னதான சிவன் பெருமைகளைப் பற்றியும் மாயூரம் நகர சபைத் தலைவர் டாக்டர் வி. வரதாச்சாரியார், ஸ்ரீ டி. எம். பாஸ்கரத் தொண்டைமான், உள்ளூர் பிரமுகர் ஸ்ரீ ஹரிகிருஷ்ணையினர் முதலியோர் அருமையான சொற்பொழிவு நிகழ்த்தினர்கள்.

சொற்பொழிவின் சுவை குன்றாமல் இருப்பதற்காக இடையிடையே இசை விருந்தும் அளிக்கப்பட்டது. பனசை செந்தமிழ்க் கல்லூரி மாணவி குமாரி சம்பூர்ணம் பன்னிரு திருமுறைகளில் இருந்து அன்னதானத்தின் சிறப்பை எடுத்துக் காட்டும் சில அருமையான பாடல்களை வெகு இனிமையாகப் பாடிச் சபையோரை மகிழ்வித்தார்.

அன்னதான சிவன் காரியதரிசி ஸ்ரீ ராமநாதன் வந்தனோபசாரம் கூறக் காலை விழா முடிந்தது. காலை ஒன்பது மணியிலிருந்து பன்னிரண்டு மணி வரை இவ்வளவு பிரசங்கங்களையும் பொறுமையோடு கேட்டுக் கொண்டிருந்த அந்த மாபெரும் சபையோரைப் பார்த்தபோது மாயவரம் மக்கள் அன்னதானப் பெரியார் மீது கொண்ட அபிமானம் நன்கு வெளியாயிற்று.

அன்னதான சிவன் இருநாள் அன்னதானத்தின் பெருமையைப் பற்றிய பிர

அன்னதான விழா சபையில் ஒரு தோற்றம்



## "ஜாதகப் பரிவர்த்தனை"

விவாகத்திற்கு முன் ஜாதகப் பொருத்தம் பார்ப்பதில் நம்பிக்கையும் அக்கரையும் கொண்ட பெற்றோர்களுக்குச் சேவை புரிவதையே முக்கியநோக்கமாகக் கருதி இவ்விளம்பரம் செய்யப்படுகிறது. கலியாணப் பருவத்திலுள்ள பிராம்மண யுவர்கள் மற்றும் யுவதிகளின் பெற்றோர்கள் தகுந்த வரன்களை தேடுவதில் மாதக் கணக்கிலும் வருஷக் கணக்கிலும் கவலைப்பட்டு பயனற்ற பிரயாணங்களில் ஏராளமாகச் செலவிட நேர்கிறது.

'' ஹாரஸ்கோப் எக்ஸ்சேஞ் '' சொல்ப செலவில் இருதரப்பினருக்கும் முக்கிய தகவல்களைக் கொடுக்க உத்தேசித்துள்ளது. இந்த சேவையைப் பயன்படுத்திக் கொள்ள விரும்புகிறவர்கள் தங்கள் பிள்ளைகள் அல்லது பெண்களின் ஜாதகங்களுடன் கோத்திரம், இனம், யோக்யதாம்சங்கள், தற்போதைய நிலவரம் முதலியவற்றையும் இன்னும் இது சம்பந்தமான இதர தகவல்களையும் கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்.

**HOROSCOPE EXCHANGE, Post Box 1834, MADRAS-1**

நல்ல பாண்டித்யமுள்ள சிறந்த ஜோஸ்யக் குழுவினரின் சேவை எப்பொழுதும் தயாராகக் கிடைக்கும்

---

# B. I. S. N. கம்பெனி லிமிடெட்



## S. S. ரஜூலா

**சென்னை - நாகப்பட்டினம் - பினாங்கு - சிங்கப்பூர்**

மேற்படி கப்பல் கீழ்க்கண்ட தேதி வாக்கில் புறப்படும்

**சென்னையிலிருந்து 6-7-1954 - நாகப்பட்டினத்திலிருந்து 7-7-1954**

மாறுதலுக்கு உட்பட்டது

ஸலூன் இடவசதி முழுவதும் புக் ஆகிவிட்டது. ஆனால் கம்பெனியின் ஏஜண்டுகளிடமிருந்து உணவுடனோ அல்லது உணவு இன்றியோ பர்த் வசதி இல்லாத பிரயாண டிக்கெட்டுகள் கிடைக்கும்.

கீழ்க்கண்ட பிரயாண மற்றும் ஆரோக்கிய பத்திரங்கள் தேவையாகும்.

1. மலேயா அல்லது சிங்கப்பூரில் உள்ள குடியேற்ற அதிகாரிகளால் கையெழுத்திடப்பட்ட அனுமதி பர்மிட்டுடன் கூடியதும் செல்லக் கூடியதுமான ஒரு பாஸ்போர்ட். பாஸ்போர்ட்டில் கையெழுத்திடப்படா விட்டால், ஒரு தனி அனுமதி பர்மிட்டோ அல்லது குடியேற்ற அதிகாரிகளால் அளிக்கப்பட்ட விஸிட்டர்ஸ் பாஸை பாஸ்போர்ட்டுடன் கொடுக்க வேண்டும். அல்லது மலேயா அல்லது சிங்கப்பூரில் உள்ள குடியேற்ற அதிகாரிகளால் அளிக்கப்பட்ட ரீ-என்ட்ரி பர்மிட். (பாரம் 1-டி-64 அல்லது 65)

2. எல்லா ஸலூன். பர்த் வசதி இல்லாத பிரயாணிகளும் வருமான வரி ஆபீஸர்கள் ஒருவரிடமிருந்து (வெளி நாட்டுப் பிரிவு) முழு வருமான வரி செலுத்தியதற்கான அல்லது வரி விலக்கு சர்ட்டிபிகேட்டை, அவர்கள் வசிக்கும் வட்டாரத்து வருமான வரி ஆபீசரிடமிருந்து '' ஏ '' பாரம் வாங்கிக் கொண்ட பிற்பாடு பெற்று கொண்டு வரவேண்டும்.

3. காலராத் தடுப்பு ஊசி போட்டுக் கொண்டதற்காகவும், வைசூரி, அம்மை வராமலிருப்பதற்காக ஊசி போட்டுக் கொண்டதற்காகவுமான செல்லுபடி சர்ட்டிபிகேட்.

பினாங், போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூர் முதலான இடங்களுக்கு நேரடியாக சரக்குகளின் ஏற்றுமதி ஏற்றுக் கொள்ளப்படும். சிங்கப்பூரில் மாற்றி பாங்காக்கிற்கு அனுப்புவதற்கான சரக்குகளும் ஏற்றுக் கொள்ளப்படும்.

பிரயாணிகள் மற்றும் சாமான்கள் ஏற்றுமதி விவரங்களுக்குத் தயவுசெய்து எழுதுக:

| | |
|---|---|
| **பின்னி & கோ., (மதராஸ்) லிட்.** | **மதுரா கம்பெனி லிமிடெட்** |
| 7, அரமனைக்காரத் தெரு, சென்னை-1 | முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம் |

சங்கத்துடன் மட்டும் முடிந்துவிடவில்லை. மந்தியானம் ராஜன் தோட்டத்தில் சுமார் 5,000 ஏழை எளிய மக்களுக்கு அன்னதானம் வழங்கப்பட்டது.

அந்தத் திருப்பணியை மிகச் சிறந்த முறையில் ஸ்ரீ கே. எஸ். சேஷாத்திரி தலைமையில் வந்த குடந்தை பாரத சாரணச் சிறுவர்களும், தேப்பெருமாள் நல்லூரில் இருந்து வந்திருந்த இளைஞர்களும் நடத்தி வைத்தார்கள்.

ஏழைகளுக்கு அன்னதானம் வழங்கும்போது ஸ்ரீ பாஷ்யம் ஐயங்காரும், கனம் பரமேஸ்வரனும் அங்கு விஜயம் செய்து அந்தச் சாப்பாட்டைத் தாங்களும் சுவைத்து ரஸித்தனர்.

** ** **

மாலையில் விழாக் கொட்டகையில் நடந்த குடந்தை ஸ்ரீமதி டி. ஆர். நவநீதத்தின் புல்லாங்குழல் கச்சேரியை ஏராளமான மக்கள் கேட்டு மகிழ்ந்தனர். இரவு சிவப்பு, பச்சை முதலிய பல வர்ண மின்சார பல்புகளால் கண்ணைக் கவரும் முறையில் அலங்கரிக்கப்பட்டிருந்த ரதத்தில் அன்னதான சிவன் திரு உருவப் படம் ஊர்வலம் வந்தது. செம்பனார் கோயில் சகோதரர்கள் திரு ராஜரத்தினம், திரு முத்துக்குமாரசாமி ஆகியவர்களும் திருக்கடையூர் திரு கோவிந்தசாமி சகோதரர்களும் நாதஸ்வரம் வாசித்து ஊர்வலத்தைச் சிறப்பித்தனர்.

குடந்தை பாரத சாரணச் சிறுவர்களின் "நாதனப் புரவி நடனம்", "மயில் நடனம்" முதலியவைகளை மாயூரம் வாசிகள் பார்த்து மகிழ்ந்தனர். அன்னதான சிவன் தம் வாழ்நாளில் எப்படி எல்லாரும் வியக்கும்படியான பல காரியங்களைச் செய்தாரோ அதேபோல அன்னதான சிவன் சங்கத்தார் அப்பெரியாரின் திருநாளைக் கண்டவரும் கேட்டவரும் வியக்கும் அற்புதத் திருவிழாவாகவே கொண்டாடினார்கள். இந்த அற்புதங்களை எல்லாம் மாயூரம் வாசிகள் நன்கு அனுபவித்து ஆனந்தித்தார்கள் என்பதை அன்று காலையில் இருந்து நடந்த ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் நன்கு தெரிந்து கொள்ள முடிந்தது.

வரவேற்புக் கமிட்டியின் தலைவர் ஸ்ரீ மருதவாணம் பிள்ளை எம். எல். ஸி. அவர்களைப் பற்றி முதலிலேயே குறிப்பிட்டிருக்கிறேன். அவர் அன்னதான சிவன் அவர்களை நேரிலேயே பார்த்து அவருடைய அன்னதானத் திருப்பணிக்கு வேண்டிய உதவிகளைச் செய்தவர்.

கமிட்டியின் துணைக் காரியதரிசியாகத் தொண்டாற்றியவர் மாயூரத்தில் பிரபல மிராசுதார் ஸ்ரீ டி. எஸ். வெங்கட்ராமய்யர்.

மாயூரம் தேசிய உயர்தரப் பள்ளியைச் சென்ற இரண்டு ஆண்டுகளாகச் சென்னை மாகாணத்திலேயே எஸ். எஸ். எல். ஸி. தேர்வில் நூறுபங்கு வெற்றி பெற்று, மாகாணத்திலேயே முதன்மையாக விளங்கும்படி செய்து வரும் அதன் காரியதரிசி ஸ்ரீ எம். எஸ். பொன்னுசாமி ஐயர், ஸ்ரீ ஆர். கே. சுப்பிரமணியம் பிள்ளை, ஸ்ரீ சாமி ஐயங்கார், ஸ்ரீ வெங்குச் செட்டியார், நகரசபைத் தலைவர் டாக்டர் வரதாச்சாரி, காளியாக்குடி ஸ்ரீ கே. வி. சீனிவாசன், மலக்குடி ஸ்ரீ வெங்கட்ரமணி, நகரசபை அங்கத்தினர் ஸ்ரீ ராமமூர்த்தி முதலியவர்கள் அன்னதானப் பெரியார் ஆண்டு விழாவின் சிறப்புக்கு மிகச் சிறந்த முறையில் சேவை செய்தார்கள்.

மாயூரம் பல துறைகளில் பெயர் பெற்ற நகரம். கலைஞர்களும், கலைவாணர்களும், அறிஞர்களும், ரஸிகர்களும் நிறைந்த நகரம். பெரிய மிராசுதார்களும் செல்வந்தர்களும், பிரபல வர்த்தகர்களும் வசிக்கும் நகரம். விழிப்படைந்துள்ள இளம் வாலிபர்கள் நிறைந்த நகரம். மாயூரத்தில் இது போன்ற திருவிழாக்களைக் குறைவில்லாமல் நடத்துவதற்கு மிகத் திறமை வேண்டும். ஒரு குறைவும் இல்லாமல் இந்த விழாவைச் சிறப்பாக நடத்தியதைப் பார்த்தவுடன், இவர்களால் சாதிக்க முடியாத காரியம் எதுவுமே இல்லை என்றுதான் சொல்லத் தோன்றியது.

தஞ்சை ஜில்லாவில் அன்னதான சிவன் சங்கத்தார் செய்து வரும் உத்தமத் திருப்பணிக்குத் தஞ்சை ஜில்லா மக்கள் பூரண ஒத்துழைப்பை அளிப்பார்கள் என்று நம்புகிறேன்.

தமது இலங்கைக் கடிதம்

# ஸ்ரீ தேசாய்க்குச் சமர்ப்பணம்!

கொழும்பு, ஜூன் மீ 12உ

இலங்கை இந்தியர் பிரச்னை தீருவதற்கு ஸ்ரீ ஸ்டான்லி மோரிஸன் என்பவர் அரசாங்கக் கட்சிப் பத்திரிகையான "யு. என். பி." வார சஞ்சிகையில் ஒரு குறுக்கு வழி சொல்லியிருக்கிறார். அவர் யோசனை சொல்லியதைக் காட்டிலும் அவருடைய கட்டுரையைப் பிரதமர் ஸர் ஜான் கொத்தலாவலையைத் தலைவராகக் கொண்ட ஐக்கிய தேசியக் கட்சியின் "யு. என். பி." பத்திரிகை பிராபல்யமாகப் பிரசுரித்திருப்பதுதான் விசேஷ முக்கியத்துவம் வாய்ந்தது. தவிர இலங்கைக்கும் இந்தியாவுக்குமிடையில் முடுச்சுப் போட்டுக் கொண்டிருப்பதில் சில அன்னிய வல்லரசுகள் எவ்வளவு தீவிரமாக அக்கறை எடுத்துக் கொண்டுள்ளன வென்பதற்கும் இந்தக் கட்டுரை ஒரு நல்ல உதாரணம் காட்டியிருக்கிறது.

மோரிஸன் என்ற இந்த மேதாவி கூறும் சில யோசனைகள் பின்வருமாறு :—

"இலங்கை ஜனநாயக காங்கிரஸைச் சேர்ந்த கிளர்ச்சிக்காரத் தலைவர்களான திருவாளர்கள் தொண்டமான், அஸீஸ் முதலியவர்களின் இலங்கைப் பிரஜாவுரிமையை உடனே ரத்துச் செய்ய வேண்டும். பாங்குகளிலிருக்கும் இவர்களுடைய பணத்தை யெல்லாம் இவர்கள் எடுக்க முடியாதபடி செய்ய வேண்டும். இவர்கள் உரிமைப் போராட்டம் நடத்தினால் போராட்டம் நடக்கும் வரையில் இலங்கையிலுள்ள இந்திய பாங்கிகளை யெல்லாம் மூடி வைக்குமாறு உத்தரவிட வேண்டும். காங்கிரஸ் தலைவர்களின் எஸ்டேட்டுகளையும் இதர சொத்துக்களையும் அரசாங்கம் கைப்பற்ற வேண்டும். வேலை நிறுத்தங்கள் நடந்தால் வேலை நிறுத்தங்களில் சம்பந்தப்படுகின்றவர்களை உடனே டிஸ்மிஸ் செய்யுமாறு முதலாளிகளைக் கட்டாயப் படுத்தச் சட்டமியற்ற வேண்டும். வேலை நிறுத்தத்தின் பொழுது தோட்டத் தொழிலாளருக்கு ரேஷன் அரிசி கொடுக்கக் கூடாது. நாடெங்குமுள்ள இந்திய வர்த்தக ஸ்தாபனங்களைப் பகிஷ்கரிக்க ஒரு பெரிய இயக்கத்தை ஆரம்பிக்க வேண்டும். இதை மீறி இந்தியர் கடைகளில் சாமான் வாங்குவோர்களை அவமானப் படுத்த வேண்டும். இந்தியாவுடன் இலங்கையை இணைப்பதுதான் இலங்கை ஜனநாயக காங்கிரஸ் தலைவர்களின் இலட்சியம்.

இலங்கை அரசாங்கம் தனது சுதந்திரத்தைக் காப்பாற்றிக் கொள்ள மேற்படி நடவடிக்கைகளை எடுப்பது சற்றும் தவறாக மாட்டாது.”

இலங்கை—இந்தியா தகராறைத் தீர்க்க மோரிஸன் கூறியிருக்கும் அருமையான யோசனைகள் சுருக்கமாக இவைதான். இலங்கையில் இந்தியத் துவேஷமேயில்லை யென்றும் இந்தியர்களிடம் இலங்கைக்கு அமோகமான நல்லெண்ணம் இருப்பதாயும் பம்பாயில் ஒரு பேட்டி யளித்துவிட்டு வந்திருக்கும் இலங்கை இந்திய ஹை கமிஷனர் ஸ்ரீ வி. வி. தேசாய் அரசாங்கக் கட்சிப் பத்திரிகை வெளியிட்டிருக்கும் மேற்படி கட்டுரையைப் படித்துச் சந்தோஷமடையட்டும்!

* * *

இலங்கை இந்தியா ஒப்பந்தத்தின் நாலாவது ஷரத்தில் பிரஜாவுரிமைக்குத் தாக்கல் செய்திருக்கும் சகல மனுக்களையும் இரண்டு வருட காலத்துக்குள் விசாரித்து முடிந்து விடுவதாகப் பிரதம மந்திரி ஸர் ஜான் கொத்தலாவலை ஒப்புக்கொண்டு வந்தார். ஒப்பந்தம் கையொப்பமாகி ஆறு மாத காலமாகியும் இந்த வாக்குறுதியை நிறைவேற்ற ஏதும் செய்யப்படவில்லை. இப்பொழுது எல்லா மனுக்களையும் இரண்டு ஆண்டுகளில் விசாரித்து முடிக்க இயலுமென்று எதிர்பார்க்க முடியாதென்று ஒரு உயர்தர சர்க்கார் அதிகாரி அறிவித்திருக்கிறார். 2.36,000 பிரஜா உரிமை மனுக்களில் சுமார் 20,000 மனுக்கள்தான் சென்ற நான்கு வருடங்களுக் கிடையில் பைசலாகி யுள்ளன. இப்பொழுது மாதத்துக்குச் சுமார் 900 மனுக்கள் வீதம் பைசலாவதைக் கவனித்தால் எல்லா மனுக்களையும் பைசல் செய்ய சுமார் இருபது வருடங்களாவது பிடிக்குமென்று மதிப்பிடப்படுகிறது. இலங்கையின் சுறுசுறுப்புக்கும் நாணயத்துக்கும் பண்பாட்டுக்கும் இது ஒரு நல்ல உதாரணம்!

* * *

நிற்க, டில்லி ஒப்பந்தத்தை அனுசரித்து பார்லிமெண்டில் பதிவுப் பிரஜைகளுக்குப் பிரதிநிதித்துவ மளிப்பதற்காக மூன்று மசோதாக்களைப் பிரதம மந்திரி இவ்வாரம் பார்லிமெண்டில் பிரேரேபித்திருக்கிறார். அவை ஜூலை முதல் வாரம் விவாதித்துச் சட்டமாக்கப்பட விருக்கின்றன. பதிவுப் பிரஜைகளுக்குத் தீவு முழுவதையும் ஒரு தனித் தொகுதியாக்கி நான்கு பிரதிநிதிகளைப் பார்லிமெண்டுக்குத் தேர்ந்தெடுக்கச் செய்வதுதான் மசோதாவின் மூலட்சியம். இலங்கையின் வம்சாவளிப் பிரஜைகளான திருவாளர்கள் கே. ராஜலிங்கம், எஸ். எம். சுப்பையா, வி. வி. வேலுப் பிள்ளை முதலியவர்கள் இந்தத் தனித் தொகுதியில் அபேட்சகர்களாக நிற்க முடியாதபடி தடை செய்யப்பட்டிருக்கிறது. பதிவுப் பிரஜைகளுக்கு, பதிவுப் பிரஜைகள் மட்டுமே பார்லிமெண்டில் பிரதிநிதிகளா யிருப்பதை அனுமதிக்க முடியுமென்று பிரதம மந்திரி அறிவித்திருக்கிறார். திருவாளர்கள் எஸ். தொண்டமான், ஏ. அஸீஸ், டி. ராமானுஜம் முதலிய மூன்று பழைய எம். பி.க்களும் பதிவுப் பிரஜைகளாகையினால் புதிய சட்டத்தினால் அவர்கள் பாதிக்கப்பட மாட்டார்கள்.

* * *

வல்வெட்டித்துறை நீச்சல் வீரர் ஸ்ரீ எம். நவரத்னஸ்வாமிக்கு எலிசபெத் மகாராணி தமது பிறந்த தினத்தில் பிரிட்டிஷ் சாம்ராஜ்யப் பதக்கம் அளித்துக் கௌரவித்திருக்கிறார். சமீபத்தில் பாக் ஜலசந்தியை ஒரு மூச்சில் நீந்திக் கடந்து உலக ரிக்கார்ட் ஏற்படுத்திய ஸ்ரீ நவரத்தினசாமியை மகாராணி இலங்கைக்கு விஜயம் செய்த பொழுது அவருக்கு அறிமுகம் செய்து வைக்கப்பட்டது இங்கு குறிப்பிடத் தக்கது. பிரபல தர்மசீலரும் தொழில் பிரமுகருமான ஸ்ரீ ஏ. செல்ல முத்துவுக்கு “அதிகார்” என்ற பட்டம் வழங்கப் பட்டுள்ளது.

இந்திய ஹை கமிஷன் முதலாவது காரியதரிசியாகச் சென்ற இரண்டரை வருட காலமாகக் கடமையாற்றிய ஸ்ரீ வி. சித்தார்த்தாசாரி அடுத்த மாதம் வேலை மாறிப் போவது இலங்கை இந்தியர்களுக்கு மிகுந்த துக்கத்தை விளைவிக்கத் தக்க செய்தி. ஹை கமிஷனின் அலங்கோலப் போக்கைப் பற்றிப் பொதுவாக எல்லோரும் குறை கூறும் இச் சமயத்தில் அந்த எல்லோருடைய நம்பிக்கைக்கும் பாத்திரமா யிருந்தவர் சாரி ஒருவர்தான். அவரும் போய் விடுகிறாரே என்பதில் இந்தியர்கள் கவலையும் துக்கமும் அடையக் காரணமிருக்கிறது. சதா சர்வதா சிரித்த முகமும் சகோதர ஜனங்களிடம் அனுதாபமும் நெருக்கடிகளைச் சமாளிக்கும் துணிச்சலும்தான் ஸ்ரீ சாரியின் பெயருக்கும் புகழுக்கும் மூல காரணம். விரைவில் அவர் இலங்கைக்குத் திரும்புவாரென்ற நம்பிக்கையுடன் இப்பொழுது அவரை வழியனுப்பி வைப்போம். —ரஜனி.



## திருமணம்

★

ஆற்றங்கல் ‘கல்கி’ ஏஜண்டு சிரஞ்சீவி **ஆர். எஸ். மணிக்கும்** ஸ்ரீகண்டேசுவரம் ஸ்ரீ பி. கணபதிஅய்யர் சகோதரி சௌ. **பாலாம்பாளுக்கும்** சென்ற மே மீ 13உ திருவனந்தபுரத்தில் வெகு சிறப்பாக விவாகம் நடந்தேறியது.

●

**வாழ்க, ஆர். எஸ். மணி-பாலாம்பாள்!**



பிரசித்தி பெற்ற நூர்ஜஹான் அரசியாவதற்கு முன் ஈரானிலிருந்து தப்பி வந்த ஒரு அகதிப் பெண், எவரையும் வசீகரிக்கும் அவள் தோற்றமே, அவள் முகலாய அரசியாவதற்கு உதவியது. அவளுடைய விலையுயர்ந்த ஆடைகள் அவள் அழகிற்கு அழகு செய்தது. அவ்வாறான கவர்ச்சியை தாங்களும் பெற நாத்திற்கும் உறுதிக்கும் பெயர் பெற்ற N. R. C. ரேயான் நூலினால் நெய்யப்பட்ட ஆடைகளை அணியுங்கள். N. R. C. ரேயான் நூல், 120, 150 டினையர்களில் கிடைக்கிறது.

# அகதிப்பெண் முகலாய அரசி ஆனாள்





**தி நேஷனல் ரேயான் கார்ப்பரேஷன் லிமிடெட்.**

மானேஜிங் ஏஜெண்டுகள் : சிறும் அன்டு கம்பெனி லிமிடெட்
ஆபிஸ் : ஸ்காட் ஹவுஸ், ப்ரூஸ் ஸ்ட்ரீட், பம்பாய்-1.
பாக்டரி : மோகனே, கல்யாண், பம்பாய் ஸ்டேட்.

விநியோகிக்கும் ஏஜண்டுகள் :

**நாகின்தாஸ் பூல்சந்த் சின்னய்**

279, ராமநாதபுரம் ரோடு, மதுரை - 138/1682, போர்ட் மெயின் ரோடு, செவ்வாய்பேட்டை, சேலம்

சின்னய் ஸில்க் ட்ரேடிங் கம்பெனி லிமிடெட், 432, அவின்யூ ரோடு, பெங்களூர்

# சக்கரவர்த்தித் திருமகன்

## 7. 'வசிஷ்டர் வாயால்'

கோபத்திலும் சாபத்திலும் தம் தபோபலம் செலவழிந்து போனதைக் கண்டு விசுவாமித்திரர் மறுபடியும்கோரமான தவஞ் செய்வதற்காக மேற்கே புஷ்கர தீர்த்தத்துக்குச் சென்றார்.

அவ்விடத்திலும், பல ஆண்டுகள் செய்த தவம் முற்றிப் பயன் தரும் சமயத்தில் ஒரு நிகழ்ச்சி நடந்து மறுபடியும் கோபத்தால் சமநிலை இழந்து தம் புத்திரர்களையே சபித்து விட்டார். அதன் பின், இனிக் கோபத்துக்கு இடம் தரக் கூடாது என்று சங்கற்பம் செய்து கொண்டு மறுபடியும் தவஞ் செய்ய ஆரம்பித்தார். பல்லாண்டுகளுக்குப் பின் பிரம்மனும் தேவர்களும் அவருக்குத் தரிசனம் தந்தார்கள்.

"கௌசிகரே! நீர் செய்த தவம் பலித்தது. நீர் இனி அரசர் கணக்கில் இல்லை. பூரண ரிஷியாகி விட்டீர்" என்று சொல்லிக் கௌரவித்து விட்டு நான்முகன் திரும்பினான்.

அதனால் விசுவாமித்திரர் திருப்தியடையவில்லை. பரமசிவனிடம் பெற்றது அஸ்திரங்கள்; இப்போது பெற்றது ரிஷி பதவி. அவர் விரும்பியதோ வசிஷ்டருக்குச் சமமான சக்தி. ஆனபடியால் இன்னும் பல்லாண்டு கடுந்தவம் செய்ய நிச்சயித்தார்.

.. ..

தேவர்களுக்கு இது பிடிக்கவில்லை. இதை எப்படியாவது தடுக்க வேண்டும் என்று புஷ்கர தீர்த்தத்துக்கு மேனகையை அனுப்பினார்கள். *புஷ்கர தீர்த்தத்தில் அந்த அப்ஸர ஸ்திரீ ஸ்நானம் செய்ய வந்தாள். அவளுடைய அழகினால் விசுவாமித்திரர் வஞ்சிக்கப் பட்டார். தம் தவத்தை நிறுத்தி விட்டு, சுகமாகப் பத்து ஆண்டுகள் கழித்தார். பத்து ஆண்டுகளும் ஒரு பகல் ஒரு இரவு போல் கழிந்து விட்டன.

பிறகு விழித்துக் கொண்டார். "ஐயோ, இப்படியாயிற்றே!" என்று வருந்தி துக்கப் பட்டார்.

மேனகைக்கு நடுக்கம். சாபத்துக்குத் தயாராகக் கை கூப்பி நின்றாள். முனிவர் கோபத்தை அடக்கிக் கொண்டு, "இது என்னுடைய மடமை; உன் குற்றமல்ல!" என்று மதுரமாகப் பேசி அனுப்பி விட்டு, இமாலயம் சென்றார். மறுபடி ஆயிரம் வருஷங்கள் இந்திரியங்களை அடக்கி உக்கிர தபசு செய்தார்.

தேவர்கள் சூழ நான்முகன் பிரசன்னமாகி, "விசுவாமித்திரரே! நீர் மேனகையைச் சபிக்காமல் பொறுத்து மறுபடியும் கடுந்தவம் ஆரம்பித்து முடித்தீர். நீர் மகரிஷி பதவியை அடைந்து விட்டீர்" என்று ஆசீர்வதித்தான்.

விசுவாமித்திரருடைய எண்ணம் அப்போதும் நிறைவேறவில்லை. மறுபடி அற்புதமானதும் அதுவரை யாருமே செய்யாததுமான தவம் ஆரம்பித்தார். ஆயிரம் வருஷம் செய்தார்.

.. .. ..

தேவர்கள் பயந்து போனார்கள். மறுபடி ஓர் அப்ஸர ஸ்திரீயை அனுப்பி வைத்தார்கள்.

"ரம்பையே! உன்னுடைய தயவு வேண்டும். நீ எப்படியாவது விசுவாமித்திர ரிஷியை ஏமாற்றி அவருடைய தவத்தை நிறுத்த வேண்டும்" என்று இந்திரன் கேட்டுக் கொண்டான். அவள் பயப்பட்டாள். ஆயினும் இந்திரனு

---

* இந்தக் காட்சியே இவ்விதழ் அட்டைச் சித்திரமாகத் திகழ்கிறது.

டைய ஏவலை ஒப்புக் கொண்டு போய் விசுவாமித்திரருடைய மனத்தைக் கலைத்தாள். கிளம்பிய காமத்தை அடக்கிக் கொண்டாராயினும் இப்படி மோசம் செய்ய வந்தாளே என்று கோபங் கொண்டு, 'நீ கல்லாகப் போவாய்' என்று சாபமிட்டார். ரிஷிகளுடைய சாபம் அவர்கள் மனத்தில் எழும் கோபமே. எண்ணிய எண்ணம் தபோ பலத்தால் உடனே சாபமாகி நிறைவேறி விடுகிறது. தவம் நஷ்டமாகி விடுகிறது.

** ** **

மறுபடி உறுதியான தீர்மானம் செய்துகொண்டு அன்னபானம், பேச்சு மூச்சு எல்லாம் அடக்கி விட்டு அது வரையில் ஒருவரும் செய்யாத மகா தபஸை ஆரம்பித்து முடித்தார்.

இதுவும் ஆயிரம் வருடங்கள் நடந்தது. தேவர்கள் பலவித இடையூறுகள் செய்து பார்த்தார்கள்; தவத்தைக் கலைக்க முடியவில்லை. விசுவாமித்திரருடைய உடல் ஒரு மரக்கட்டைபோல் ஆயிற்று. இந்திரியச் செயல்கள் எல்லாம் நின்று போய் உயிர் மட்டும் இருந்தது.

தேவர்கள் அனைவரும் விசுவாமித்திரர் செய்த தவத்தின் உக்கிரத்தால் தவித்தார்கள். அந்த வேதனை தாங்க முடியாமல் அவர்கள் பிரம்மனிடம் சென்று கைகூப்பி, "நாதனே! எங்களால் கௌசிக மகரிஷியினுடைய தவத்தை இனிப் பொறுக்க முடியாது. இடையூறு செய்ய நாம் எடுத்துக் கொண்ட முயற்சிகள் ஒன்றும் பயன் படவில்லை. நாம் அழிந்து போவோம் போலிருக்கிறது. அவர் விரும்பிய வரத்தைத் தந்துவிட வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார்கள்.

அப்படியே தேவர்கள் சூழ நான்முகன் விசுவாமித்திரரிடம் சென்று தரிசனம் தந்து, "நீர் பிரம்ம ரிஷியாகி விட்டீர். உமக்கு எல்லா மங்களமும் ஆகுக" என்று ஆசிர்வதித்தான். விசுவாமித்திரர் மகிழ்ந்தார். ஆயினும்,

"இந்தப் பதவி வசிஷ்டர் வாயால் வந்தால் அல்லவோ நான் பூரண திருப்தியடையலாம்?" என்று மிக வினயமாகச் சொன்னார்.

வசிஷ்டரும் பழைய சண்டையை நினைத்துப் புன்னகை செய்து, "நீர் செய்த கடுந் தவங்களின் பயனை நீர் அடைந்தீர். நீர் பிரம்மரிஷி என்பதைப் பற்றி ஒரு சந்தேகமுமில்லை" என்றார். எல்லோரும் மகிழ்ந்தார்கள்.

** ** **

இவ்வாறு அற்புத தவங்கள் அற்புத முறையில் விடா முயற்சியுடன் செய்து வெற்றி பெற்ற மாமுனிவர் தசரதன் சபைக்கு எதிர்பாராமல் திடீர் என்று வந்ததைக் கம்பர் இவ்வாறு பாடினார்:

மடங்கல்போல் மொய்ம்பினன்
முன்னர் மன்னுயிர்

அடங்கலும் உலகம்வேறு
அமைத்துத் தேவரோடு

இடங்கொள் நான்முகனையும்
படைப்பன் கண்(டு)எனத்

தொடங்கிய கோசிக
முனிவன் தோன்றினன்.

இந்திரனுடைய சபைக்கு நான்முகன் வந்தால் தேவராஜன் எவ்வாறு வரவேற்பானோ அதுபோல தசரதன் எழுந்து முனிவரை வரவேற்று, முனிவருடைய பாதங்களைத் தொழுது, "இன்றே என் வினைத் தொடர்பு தீர்ந்து விட்டது. இது என் முன்னோர் செய்த தவப் பயனே. இரவு தீர்ந்து சூரியோதயமானது போல் தங்களுடைய திருமுகம் கண்டேன். இனி எனக்கென்ன குறை? அரசனுக ராஜ்யத்தை ஆண்டு தவத்தினால் பிரம்மரிஷியான தாங்கள் என்னைத் தேடி வந்தீர்களே! என்னால் என்ன காரியம் ஆக வேண்டும்? சொல்லி அருள வேண்டும்! அதைச் செய்யக் கடமைப் பட்டவன் நான்" என்றான்.

ராஜாஜி

தசரதன் சொன்ன சொல்லைக் கேட்டு விசுவாமித்திரர் மிக மகிழ்ந்தார். அவருடைய தேஜஸ் இன்னும் அதிகமாகப் பிரகாசித்தது.

"அரசனே! உம்முடைய பொன் மொழிகள் உமக்கே தகும். உம்மைத் தவிர வேறு யார் இப்படிப் பேசுவார்கள்? நீர் பிறந்த குலம் இக்ஷ்வாகு குலம். நீர் அடைந்திருக்கும் குருவோ வசிஷ்ட முனிவர். வேறு எவ்வாறு நீர் பேசுவீர்? நான் கேளாமலேயே நீர் வாக்குத் தந்து விட்டீர். அது என் இதயத்தைத் திருப்திசெய்து விட்டது. நான் வந்த காரியத்தைப் பூர்த்தி செய்து தருவீராக" என்று கூறித் தாம் வந்த காரியத்தை உடனே சொல்ல ஆரம்பித்தார்.

## 8. "ராமனைத் தருவீர்"

"நான் நியமம் பூண்டு ஒரு வேள்வி நடத்துகிறேன். ஆரம்பித்து முடியும் தறுவாயில் மாரீசன், சுபாஹு என்ற இரண்டு அரக்கர்கள் அதைக் கெடுத்து வருகிறார்கள். அவர்கள் தேக பலமும் வீரியமும் யுத்தப் பயிற்சியும் பெற்ற அரக்கர்கள். சாபமிட்டு அவர்களை நானும் மற்ற ரிஷிகளும் அடக்க முடியும். ஆனால் நியமமும் தவமும் கெடாமல் நடந்து கொள்ள வேண்டியதாக இருக்கிறது. இந்தச் சங்கடத்தில் நானும் மற்ற ரிஷிகளும் கஷ்டப்படுகிறோம். மாமிசமும் ரத்தமும் யாக வேதிகை பேரில் எறிந்து வேள்வி நடைபெறாமல் செய்து வருகிறார்கள். உம்முடைய வீர குமாரர்களில் மூத்தவனான ராமனை என்னுடன் அனுப்பினீரானால் எங்களுடைய கஷ்டம் நீங்கும். என் பாதுகாப்பில் அவனுடைய வீரமும் திவ்விய பலமும் வளர்ந்து இந்த அரக்கர்களை எதிர்த்து வெற்றியோடு பெரும் புகழ் அடைவான். இது நிச்சயம். ராஜகுமாரனைச் சில நாட்களுக்கு என்னிடம் ஒப்புவிப்பீராக. நான் கேட்டதை மறுக்க வேண்டாம். நான் கேட்பதற்கு முன்பே நீர் அளித்த வாக்குறுதியை நிறைவேற்றுவீராக. குமாரனுடைய க்ஷேமத்தைப் பற்றிச் சந்தேகப்பட வேண்டாம். இந்தக் காரியத்தை நீர் செய்தால் மூவுலகத்திலும் என்றென்றைக்கும் புகழுடைவீர். வசிஷ்டரும் மந்திரிகளும் நான் சொல்வதை அங்கீகரிப்பார்கள்" என்றார் விசுவாமித்திரர்.

முனிவர் சபைக்கு வந்தபொழுது பெரு மகிழ்ச்சி யடைந்த அரசன், இதைக் கேட்டதும் சொல்லொணாத பயமும் கவலையும் உண்டாகி நடுங்கினான். எவ்வளவோ கஷ்டப்பட்டுப் பெற்ற அருமைப் புத்திரனை அரக்கர்களுக்குப் பலி கொடுக்க வேண்டியதாயிற்றே. இல்லையெனில், விசுவாமித்திரருடைய பெரும் கோபத்துக்கு ஆளாக வேண்டுமே. இதற்கென்ன செய்வது என்று ஒன்றும் தோன்றாமல் திகைத்தான். கொஞ்ச நேரங் கழித்துத் திகைப்பிலிருந்து புத்தியைச் சுவாதீனப்படுத்திக் கொண்டு சொன்னான்.

"பதினாறு வயது பூர்த்தியாகாத ராமனுக்கு ராக்ஷசர்களோடு யுத்தம் செய்யும் தகுதியை நான் காணவில்லையே! அவனை அனுப்பச் சொல்லுகிறீரே, இது என்ன பயன் தரும்? யுத்தங்களிலுள்ள மோசடிகள் ஒன்றைப் பற்றியும் அவனுக்குத் தெரியாதே? ராக்ஷசர்கள் எப்போதும் மோச யுத்தம் தானே செய்வார்கள்? அந்த அரக்கர்களை எதிர்ப்பதற்குச் சின்னஞ் சிறுவனை அனுப்புவது சரியான யோசனையல்ல. நான் இருக்கிறேன்; என்னுடைய சதுரங்க சேனை இருக்கிறது. அதையெல்லாம் விட்டு விட்டுக் குழந்தையைக் கேட்கிறீரே! அரக்கர்கள் எங்கே, இவன் எங்கே? இவனா அவர்களை எதிர்த்து உம்முடைய வேள்வியைக் காக்கப் போகிறான்? எனக்கு உம்முடைய எதிரிகளைப் பற்றி எல்லா விஷயமும் சொல்லுவீர். நான் உம்முடன் என் சேனையைக் கூட்டிக்கொண்டு சென்று வேண்டியதையெல்லாம் செய்வேன். அது இருக்கட்டும். அந்த அரக்கர்களைப் பற்றியும் அவர்கள் பலத்தைப் பற்றியும் விவரமாகச் சொல்லவும்" என்று பேச்சை மாற்றுவதற்காகக் கேட்டான்.

விசுவாமித்திரர் மாரீசனைப் பற்றியும் சுபாஹுவைப் பற்றியும் அவர்களு



சென்ற பதினேரு வாரங்களாக வெற்றிகரமாக நடந்து கொண்டிருக்கும் நவாப் ராஜமாணிக்கத்தின் "ஐயப்பன்" நாடகத்தைச் சமீபத்தில் சென்னைக்கு விஜயம் செய்திருந்த பாரதநாட்டு உதவி ஜனாதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் பார்த்து மகிழ்கிருர்.

டைய எஜமானன் ராவணனைப் பற்றியும் விவரமாகச் சொல்லி ராமனை அனுப்ப வேண்டும் என்று மறுபடியும் வற்புறுத்தினர்.

"தவமிருந்து பெற்ற என் அருமை ராமனை விட்டுப் பிரிந்தால் என் உயிரே போய்விடும். வேண்டுமாணுல் நான் சேனையுடன் வருவேன். நீர் சொல்வதைப் பார்த்தால் என்னுலுங் கூட இந்த வேலையை முடிப்பது கடினமாக இருக்கும் போல் தோன்றுகிறது! அப்படியிருக்க என் மகனை அனுப்பவாவது, முடியாது!" என்ருன்.

திடீர் என்று ஏற்பட்ட திகைப்பினுல் முன்னுக்கும் பின்னுக்கும் முரணுகப் பலவிதமாகப் பேச ஆரம்பித்தான் தசரதன். அப்படி அவன் பேசி, ராமனை அனுப்ப மறுத்ததைக் கண்டு விசுவாமித்திரருக்குக் கோபம் நெய்விட்ட வேள்வித் தீ போல் பொங்கிற்று.

விசுவாமித்திரர் சொன்னர்: "முதலில் கேட்டதை யெல்லாம் தருகிறேன் என்று தாராளமாகச் சொல்லி விட்டு இப்போது அதைப் பொய்யாக்கினீர். இந்த நடவடிக்கை இக்ஷ்வாகு குலத்திற்குத் தகுந்த தல்ல. சிறந்த வம்சத்துக்குத் துரோகம் செய்கிறீர். இதுவே உம்முடைய முடிவாகின், நான் வந்த வழி திரும்புகிறேன். சத்தியம் தவறிப் பந்துமித்திரர்களுடன் சுகமாக இருப்பீராக."

முனிவருடைய கோபத்தால் பூதேவி நடுங்கினுள். தேவர்களும் பயந்தார்கள். வசிஷ்டர் அரசனை நோக்கி மெதுவாகச் சொன்னர்:

"தருமமே மானிட உருவம் எடுத்தது போல் இக்ஷ்வாகு வம்சத்தில் உதித்துப் புகழும் திருவும் பெற்ற நீர் சத்தியத்தினின்று பிறழ்தல் தகாது. உம்முடைய வாயினின்று 'செய்கிறேன்' என்று ஒரு தடவை வார்த்தை வெளியான பின் அதைப் பிறகு செய்யாமலிருத்தல் உம்முடைய தான தரும வேள்விகளை யெல்லாம் ஒரேயடியாக அழித்து விடும். ராமனை முனிவருடன் அனுப்புவீராக. லக்ஷ்மணனையும் சேர்த்து அனுப்புவீராக. யுத்தப் பயிற்சியைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். குசிக புத்திரருடைய பாதுகாப்பிலுள்ள உம் குமாரர்களை ராக்ஷசர்கள் தீண்ட முடியாது. அமிருதத்தை அக்னிச் சக்கரம் காப்பது போல் இவர் ராமனைக் காப்பார். இவருடைய பூரண மகிமை உமக்குத் தெரியவில்லை. தவமே உடல் கொண்டு நிற்கிறவர். வீரர்களுள் வீரர். அறிவுக்கும் தவத்துக்கும் எல்லையானவர். இவருக்குத் தெரியாத அஸ்திரமில்லை. அந்த விஷயத்தில் மூன்று உலகங்களிலும் இவருக்குச் சமானமானவன் ஒருவன் இருந்ததில்லை. இருக்கப் போவதுமில்லை. இவர் அரசனுக இருந்த காலத்தில் எல்லா அஸ்திர வித்தைகளையும் வரமாகப் பெற்

திருக்கிறார். இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் ஆகிய மூன்று காலங்களிலும் இவர் அறியாதது இந்த உலகத்தில் ஒன்றுமில்லை. இத்தகைய மகாவீரமும் தேஜசும் பொருந்திய விசுவாமித்திர முனிவருடன் உம் குமாரன் ராமனை அனுப்புவதைப் பற்றிச் சந்தேகமே வேண்டாம். முனிவருடைய காரியத்தை முனிவரே பார்த்துக் கொள்ளுவதற்கு வேண்டிய சக்தி அவருக்கு உண்டு. உம்முடைய குமாரனுடைய நன்மைக்காகவே அல்லவோ அவர் இங்கே வந்து உம்மைக் கேட்கிறார்! தயங்காமல் உம் குமாரனை அவர் கேட்கிறபடி அவருடன் அனுப்புவீராக."

இவ்வாறு மகா ஞானி வசிஷ்டர் சொன்னதைக் கேட்டதும் அரசனுடைய புத்தி தெளிந்தது. ராம லக்ஷ்மணர்கள் இருவரையும் அனுப்புவதென்று நிச்சயம் செய்தான்.

ராம லக்ஷ்மணர்களை முனிவர் முன் அழைத்து வந்தார்கள். அரசனும் தாய்மார்களும் வசிஷ்டரும் மங்கள மந்திரம் சொல்லியான பின் உச்சி மோந்து "முனிவருடன் செல்லுங்கள்" என்று வழி அனுப்பி வைத்தார்கள்.

அச்சமயம் சுகமாகக் காற்று வீசிற்று. ஆகாயத்தினின்று பூமாரி பொழிந்தது. அசரீரி ஒலித்தது. கையில் வில் பிடித்து இரு யுவர்களும் முனிவருடன் கம்பீரமாகச் சென்றார்கள்.

** ** **

ரிஷி யுலகத்துக்கே சிகரமாக விளங்கிய விசுவாமித்திரரும், அழகே தேகமெடுத்தாற் போன்ற ராஜகுமாரர்களும் தசரதனிடம் விடைபெற்றுக் கொண்டு போகும் மங்களக் காட்சியை வால்மீகியும் கம்பரும் மிகவும் அனுபவித்துப் பாடியிருக்கிறார்கள்.

தம்முடைய தவ வலிமையால் ஒரு புது உலகத்தையே சிருஷ்டிக்கும் சக்தி வாய்ந்த உபாத்தியாயர்; அரக்கர்களை ஒழித்துக் கட்டவே அவதரித்தவர்கள் மாணவர்கள்—இத்தகைய குரு சிஷ்யச் சேர்க்கையின் அழகை வால்மீகி முனிவர் கம்பீரநாதம் பொருந்திய எட்டுச் சுலோகங்களில் வர்ணிக்கிறார். வெற்றி வாள் இடுப்பில் தொங்க, குன்றைப் போன்ற தோள்களின் மேல் ஒரு பக்கம் வில்லும் ஒரு பக்கம் தூணியும், மத்தியில் கம்பீரமாக உயர்ந்து நிற்கும் தலையுமாக முத்தலை நாகங்கள் படமெடுத்துச் செல்வது போல் ராஜ குமாரர்கள் காட்சி தந்தார்கள்.

கம்பர் தமக்கே உரிய பாணியில் பாடுகிறார்:

வென்றி வாள்புடை
விசித்து மெய்ம்மைபோல்
என்றும் தேய்வுருத்
தூணி யாத்திரு
குன்று போன்றுயர்
தோளிற் கொற்றவில்
ஒன்று தாங்கினன்
உலகந் தாங்கினன்.

அன்ன தம்பியும்
தானும் ஐயனும்
மன்னன் இன்னுயிர்
வழிக்கொண் டாலெனச்
சொன்ன மாதவன்
தொடர்ந்த சாயைபோல்
பொன்னின் மாநகர்ப்
புரிசை நீங்கினன்.

## உதவி புரியுங்கள்

திக்கற்றவர்களாயிருந்த திரு டி. கே. ராஜகோபாலன் தம்பதிகளின் க்ஷயரோக நிவாரண உதவிக்கு ஏற்கெனவே வெளியான தொகைகளுக்குப் பின்னர் கீழ்க்காணும் அன்பர்கள் பொருள் உதவி செய்திருக்கிறார்கள்:—

மயிலாப்பூர் ரஸிக ரஞ்சனி சபைக் காரியதரிசி, ஸ்ரீ என். கிட்டசன் அவர்கள் மூலம் பல அன்பர்கள் ரூ. 86; ராவ்பகதூர் ஜி. அப்பாசாமி ஐயர், புது டில்லி ரூ. 50-8-0; ஸ்ரீ ஜி. பாலா, பம்பாய் ரூ. 25; ஸ்ரீ தேவதாஸ் காந்தி, புது டில்லி ரூ. 20; ஸ்ரீ கெ. வி. ஸியாமகிருஷ்ணன், மலேயா ரூ. 15; ஸ்ரீ எஸ். கே. ஐயர், பம்பாய் ரூ. 10; ஏ. நாராயண ஐயர், பூனா ரூ. 10; ஸ்ரீ கே.வி.எஸ். மணியம், கோத்தகிரி ரூ. 10; வி. ஜயராமன், சகர்புரா ரூ. 5; ஸ்ரீ ஆர். துரைசாமி, சென்னை ரூ. 5; ஸ்ரீ என். நாராயணன், கோட்டையூர் ரூ. 5; ஸ்ரீ வி. ரங்கநாதன், புது டில்லி ரூ. 5; ஸ்ரீ டி. கிருஷ்ணமாச்சாரி, திருவாங்கூர் ரூ. 2.

பெருந்துறை ஸ்ரீ ராமலிங்கம் க்ஷயரோக வைத்திய சாலையில் மேற்படி தம்பதிகள் சிகிச்சை பெற்று வருகிறார்கள். நன்கொடையாளர்களுக்கு அத் தம்பதிகள் தங்கள் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறார்கள். மரணத்தின் வாசலில் நின்ற தம்பதிகளுக்கு உயிர் அளித்து, நம்பிக்கை ஊட்டிய நன்கொடையாளர்களின் உதவி "காலத்துச் செய்த உதவியாதலால், ஞாலத்தின் மாணப் பெரிது" என்பது மிகையாகாது. இன்னமும் சில மாத காலத்துக்கு அத் திக்கற்ற தம்பதிகளுக்குப் பொருளுதவி தேவையாயிருக்கிறது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம்.




## கீல்வாதத்தால் வருந்துபவர்களுக்கு முக்கிய செய்தி

ஸ்லோன்ஸ் லினமெண்ட் (தைலம்) தசைப் பிடிப்புகளுக்கும் கீல்வாதத்திற்கும் மிகவும் சிறந்த முறையில் ஏன் பயனளிக்கிறது என்பதை விஞ்ஞானிகள் தெரிவிக்கிறார்கள். நீங்களே பார்த்துக் கொள்ளுங்கள்! இன்பரா-ரெட் கிரணங்களை உபயோகித்து சருமத்தினடியிலிருக்கும் ரத்தக் குழாய்களை போட்டோ எடுத்திருக்கிறார்கள். மேலே காட்டிய போட்டோ படங்கள் வலியுற்ற பாகங்களுக்கு ஸ்லோன்ஸ் எப்படி இரத்த சப்ளையை அதிகப்படுத்தி அவ்வலியுற்ற தசைப் பற்றுக்களை சீக்கிரம் குணமாகும்படி செய்கிறது என்பதைக் காண்பிக்கிறது. ஆமாம், இயற்கைக்கு உதவியாயிருந்து வலியை ஆச்சரியகரமாக ஸ்லோன்ஸ் நீக்குகிறது! லினமெண்ட்களில் ஸ்லோன்ஸ் புகழ் பெற்று சிறந்து விளங்குவதில் ஆச்சரியமில்லை.

இன்றைக்கே ஸ்லோன்ஸ் வாங்குங்கள்

ஸ்லோன்ஸ் லினமெண்ட்




**SLOAN'S LINIMENT**

201

## பிரசித்தி பெற்ற ஸ்விஸ் தொழிற்சாலையிலிருந்து தயாரிக்கப்பட்ட கைக் கெடிகாரங்கள்

கைக் கெடிகாரம்
பாக்கெட் கெடிகாரம்.
டயம்பீஸ் ஒவ்வொன்றும்
5 வருஷ உத்தரவாதம்



| | ஒரிஜினல் விலை | தற்போது விலை |
|---|---|---|
| பாக்கெட் வாட்ச (ஆஸ்ட்ரியா) | 24 | 10/- |
| அயல் நாட்டு அலாரம் டயம்பீஸ் | 30 | 14/- |
| உயர் ரகம் அலாரம் டயம்பீஸ் | 35 | 16/- |




| | | |
|---|---|---|
| 15 ஜுவல்ஸ் ரோல்ட் கோல்ட் | 75 | 36/- |
| 15 ஜுவல்ஸ் ,, 20 மைக்ரோன்ஸ் | 90 | 40/- |




| | | |
|---|---|---|
| 15 ஜுவல்ஸ் வாட்டர்ப்ரூப் | 80 | 38/- |
| 17 ஜுவல்ஸ் வாட்டர்ப்ரூப் | 90 | 44/- |
| 21 ஜுவல்ஸ் வாட்டர்ப்ரூப் | 130 | 60/- |




| | | |
|---|---|---|
| 5 ஜுவல்ஸ் க்ரோம்கேஸ் பிராஞ் | 42 | 20/- |
| 5 ஜுவல்ஸ் ரோல்ட் கோல்ட் | 52 | 25/- |
| 15 ஜுவல்ஸ் ரோல்ட் கோல்ட் | 70 | 32/- |

### குறைந்த விலையில் பவுண்டன் பேனாக்கள்



ஸ்வான் கோல்ட் நிப் பவுண்டன் பேனா ரூ. 14/-
கோல்ட் கேப் ரூ. 18/- பிளாக் பேர்டு ரூ. 13/-
ராஜா(ஜெர்மன்)ரூ. 10/- வெல்ஷார்ப் மாடல் ரூ. 6/-
வில்லை ரூ. 5/- பார்க்கர் ஜூனியர் மாடல் (ஜப்பான்) ரூ. 7/-

**PIONEER WATCH CO.,**
Post Box No. 11428, CALCUTTA - 6



# வேணு கானம்

விஜயம்

## 16. கதவு திறந்தது!

"சுமதி, மகாராஜாவின் கட்டளையைப் பார்த்தாயா? இது ரொம்ப யோசிக்கும் படியாக அல்லவா செய்து விட்டது!

பூபதி, சிறையிலிருந்து நீ விடுதலையடைய வேண்டுமானால் ஒரு நிபந்தனை. கருங்கல் கரைய வேண்டும். அரசனின் உத்தரவில்லாமல் சிறைக் கதவுகள் திறந்து கொள்ள வேண்டும். இதைச் செய்தால் நீ விடுதலை பெறலாம். நாளை ஒரு நாள் தவணை. தவறினால் நாடு கடத்தப்படுவாய்" என்று ஒருமுறை பலமாகப் படித்து விட்டுப் பூபதி சிந்தனையில் ஆழ்ந்தான்.

ஏற்கெனவே யோசித்துக் கொண்டிருந்த சுமதி பூபதியிடம் பாய்ந்து ஓடி வந்தாள். "பூபதி, இது அநியாயம்! உங்களை எப்படியாவது நாடு கடத்திவிட இந்தச் சூழ்ச்சி ஏற்பாடாகியிருக்கிறது. இது மந்திரிமார்களின் சதி யாலோசனையாயிருக்க வேண்டும். இதோ என் தகப்பனாரைப் பார்த்து இந்த அர்த்தமற்ற உத்தரவைத் தகர்த்தெறிகிறேன். அது முடியாவிட்டால் நானும் உங்களுடன் நாட்டை விட்டு வெளியேறுவேன்!" என்று ஆவேசத்துடன் கூறிவிட்டு, சுமதி வெளியே போக விரைந்தாள். அப்பொழுது பூபதி சட்டென்று அவள் பக்கம் திரும்பி அவள் கையைப் பிடித்து நிறுத்தினான்.

"சுமதி, அவசரப்படாதே. பொறுமையாயிரு. ஏன் இப்படிப் பதறுகிறாய்?" என்று கேட்டுப் பூபதி சிரித்தான்.

"பூபதி, விஷயம் முற்றிவிட்டது. பொங்கியெழ வேண்டிய சமயத்தில், பொறுமையைப் போதிக்கிறீர்கள். சீறி எழ வேண்டிய சந்தர்ப்பத்தில் சிரிக்கிறீர்கள்!" என்று கூறிச் சுமதி வருத்தத்துடன் சற்று படபடப்புத் தணிந்து நின்றாள்.

"சுமதி, நாடகப் பாணியில் வெளுத்து வாங்கிவிட்டாயே! நீ சொல்வது நியாயம். இப்பொழுது பொங்கி யெழ வேண்டிய சமயம்தான். நான் சொல்லுகிறபடி செய்கிறாயா?" என்று பூபதி கேட்டான்.

சுமதி ஆவலுடன், "என்ன செய்ய வேண்டும், சொல்லுங்கள்!" என்றாள்.

"சுமதி, மகாராஜாவிடம் போய், அவர் விதித்த நிபந்தனைப்படி நான் நடக்கத் தயார் என்று தெரிவித்து விடவேண்டும். இது முடியுமா?"

"பூபதி, நீங்கள் எப்படி நிபந்தனையை நிறைவேற்றுவீர்கள்?"

"சுமதி, எனக்கு உன் வீர வாசகமே தைரியம் தந்து விட்டது. எப்படியும் நிபந்தனையை நிறைவேற்றுவேன். நிபந்தனையில் தவறினால் இருவரும் நாட்டை விட்டுச் செல்வோம்! கோழையாயிருக்க நான் விரும்பவில்லை! சுமதி, நீ ரொம்ப நேரமாக இங்கேயிருக்கிறாய். மகாராஜா கோபிப்பார். நாளைக்கு மகாராஜாவுக்கு எதிரில் நிபந்தனையை நிறைவேற்றுவேன். அப்பொழுது நீயும் பார்த்துத் தெரிந்து கொள். இப்பொழுது உடனே நீ அரண்மனைக்குப் போ!"

தான் சிறைச்சாலைக்கு வந்து வெகு நேரமாகி விட்டது என்பது நினைவுக்கு வந்ததும் சுமதி பூபதியிடம் விடை பெற்றுக் கொண்டு, "இப்பொழுதுதான் என்

# நன்றி அறிவிப்பு

★

எனது குமாரன் சிரஞ்சீவி **குருசாமிக்கும்** பட்டிவீரன்பட்டி ஸ்ரீ பி. ஆர். கருப்பையா நாடார் அவர்கள் புதல்வி செள. **அமலோற்பவத்திற்கும்** 2-6-54 புதன் கிழமை பட்டிவீரன்பட்டியில் நடைபெற்ற திருமண வைபவத்தில் கலந்துகொண்ட நண்பர்கள், உறவினர்களுக்கும் வாழ்த்துக்கள் பரிசுகள் வழங்கிய அன்பர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியை இதன் மூலம் தெரிவித்துக் கொள்கிறேன்.

**சி. மா. பொன்னைய நாடார்**

தேனி
9-6-'54

காட்டன் மெர்ச்சென்ட்,
கமிஷன் மண்டி



மனம் நிம்மதி யடைந்தது. இனிமேல் நிபந்தனையைப் பற்றிக் கவலையில்லை. அப்பாவிடம் சொல்லுவேன்! அதில் வெற்றி பெற்றாலும் தோற்றாலும் நாம் சேர்ந்து வாழலாம்!" என்று குதூகலத்துடன் கூறிவிட்டு, குதித்துக் கொண்டு சிறையை விட்டு வெளியேறினான்.

*　　*　　*

மறு நாள் காலை சிறைச்சாலை வாசலில் என்றும் இல்லாத கூட்டம் இருந்தது. மந்திரிகளும், நகரத்து முக்கியப் பிரமுகர்களும், அரசாங்கத்தை நிர்வகிக்கும் பெரிய அதிகாரிகளும் வந்து வரிசையாக அமர்ந்திருந்தார்கள். சற்று நேரத்துக்கெல்லாம் அரசனும் ராஜகுமாரி சுமதியும் வந்து அமர்ந்தார்கள்.

மந்திரி சிறை யதிகாரிக்கு ஏதோ சைகை காட்டினான். மறுகணம் சிறையி லிருந்து அற்புதமான வேணுகானம் கேட்டது. சிறைச்சாலைக் கம்பிக் கதவின் அருகே அமர்ந்து பூபதி தன்னை மறந்து குழல் வாசித்தான்.

முதலில் சாதாரணமாக ஆரம்பித்த வேணு கானம், சிறைச்சாலை யிருந்த அந்த அமைதியான வனப்பிரதேசம் முழுவதும் நிறைந்து பரவியது. வான வீதியில் பறந்த பறவைகள் இரை தேடச் செல்லுவதை மறந்து வேணுகானத்தில் லயித்தன; வன விலங்குகள் குழலோசையில் கட்டுண்டு கிடந்தன; சிறைக் காவலர்கள் தங்கள் கடமையை மறந்து, அரசசபை கூடி யிருப்பதையும் மறந்து இசை வெள்ளத்தில் ஆழ்ந்தனர்; அரசன், மந்திரிகள், மற்றும் பிரமுகர்கள் யாவரும் பூபதியின் குழலோசையில் மயங்கி விட்டனர்.

காட்டு விலங்குகளெல்லாம் கேட்டு மன மகிழும்படியும், மன்னனும் மந்திரிமார்களும் மட்டற்ற மகிழ்ச்சியில் ஆழ்ந்து போகும்படியும் செய்த பூபதியின் குழல் இசை திடீரென்று சோக கீதமாக மாறியது. அந்தக் கீதம் கேட்டவர்களின் இதயங்களிலும், நரம்புகளிலும் புகுந்து, கரை காண முடியாத சோக உணர்ச்சியை நெடுகப் பரவச் செய்தது. சிறிது நேரத்துக்கெல்லாம் மன்னன், மந்திரிகள், அரசாங்கத்து அதிகாரிகள் எல்லோருடைய கண்களிலும் நீர் மல்கியது. குதிரைகள் புல்லை மறந்து சோர்ந்து படுத்தன. சிறைக் காவலர்கள் ஆயுதங்களைக் கீழே போட்டு விட்டு உட்கார்ந்து விட்டனர். செடிகளும் கொடிகளும், மரங்களும் பூபதியின் வேணு கானம் எழுப்பிய சோக கீதத்தில் லயித்து ஆடாமல் அசையாமல் நின்றன.

அரசரின் உள்ளம் நெகிழ்ந்து விட்டது; கண்களில் நீர் பெருகியது. காவலர்களை நோக்கிச் சிறைக் கதவுகளைத் திறக்கும்படி சைகை காட்டி உத்தரவிட்டார்.

மறு நிமிஷம் சிறைச்சாலைக் கதவு 'கடாங்' என்ற ஓசையுடன் திறக்கப் பட்டது. மகாராஜா உடனே ஓடி, பூபதியைத் தழுவிக் கொண்டார்.

“பூபதி, நீ என் ராஜ்யத்துக்கு வந்து சிறையில் அகப்பட்டுக் கொண்டதிலிருந்து உன்னை என்ன செய்வது என்று யோசித்துத் தவித்தேன். தைரியமும் புத்தி சாதுர்யமும் கொண்ட உன்னைப் பரீட்சை செய்து பாராமல் அரச குடும்பத்தில் சேர்த்துக் கொள்ள முடியவில்லை. அரண்மனையைச் சேர்ந்தவர்களுக்கும், அரசாங்க அதிகாரிகளுக்கும் உன் புத்தி சாதுர்யத்தையும் சாமர்த்தியத்தையும் தெரிவிக்க வேண்டியது என் கடமையாகிறது. மன்னன் தன்னுடைய சொந்த விஷயங்களில் கூட மனம் போனபடி நடக்கலாகாது. மன்னன் தவறு செய்ததாக மக்கள் நினைக்க இடந் தரக் கூடாது. அதற்காகவே இந்த ஏற்பாடு. சுமதியின் உயிரைக் காப்பாற்றித் தந்த உனக்கு இந்த ராஜ்யத்தையே கொடுத்தாலும் தகும். உன் விஷயத்தில் கல்லாயிருந்த எங்கள் மனமெல்லாம் உருகி விட்டது. ஆகவே நிபந்தனைப்படி கல் கரைந்தது. சிறைக் கதவுகள் திறந்து கொண்டன. உனக்கு விடுதலை!” என்று மகாராஜா நெகிழ்ந்த குரலில், எல்லோருக்கும் கேட்கும்படி சொன்னார். பூபதி மலர்ந்த முகத்தோடு வெளியே வந்தான்.

தாங்க முடியாத மகிழ்ச்சியுடன், “அப்பா, பூபதி நாட்டை விட்டுப் போக வேண்டியதில்லையே?” என்று தழுதழுக்கக் கேட்டாள் சுமதி.

“சுமதி, இல்லை, இல்லை! ஆனால் இன்னொரு நிபந்தனை. நாளைக்கே நமது வீரர்கள் போர்ப் பயிற்சி பெறும் முகாமில் சேர்ந்து பூபதி மல் யுத்தம், வில் வித்தை, யானை ஏற்றம், குதிரை ஏற்றம், வாள் போர் முதலிய எல்லா வித்தைகளிலும் தேர்ச்சி பெற வேண்டும். கல்விப் பயிற்சியும் அங்கு அளிக்கப்படும்!” என்றார் மகாராஜா.

சுமதி ஆவலும் கவலையும் பொங்க, “அப்பா!” என்று அழைத்தாள்.

அவள் என்ன கேட்கப் போகிறாள் என்பதை முன்பே அறிந்திருந்த மகாராஜா, “சுமதி, நீயும் பூபதியுடன் சேர்ந்து அங்கு பயிற்சி பெற வேண்டும்!” என்று புன்னகையுடன் சொன்னதும் சுமதியின் முகமும் பூபதியின் முகமும் மற்றும் எல்லோருடைய முகங்களும் மலர்ந்தன. பிறகு சபை கலைந்தது.

மறுநாள் பூபதியும் சுமதியும் ராணுவ முகாமுக்கு உற்சாகத்துடன் புறப்பட்டனர். இருவரும் மலர்ந்த முகத்துடன் ராஜ வீதியில் ஜோரான நடை போட்டுக் கொண்டு புறப்பட்ட காட்சியை ஜனங்கள் எல்லோரும் கண்டு மகிழ்ந்தனர்.—கதை முடிந்தது.





# தேர்வு முறை

மே மீ 30-ந் தேதி ''கல்கி'' இதழில் உள்ள 'சிந்தித்துப் பார்ப்பார்களாக!'— 'மனமாற்றம் நீடிக்குமா!' என்ற தலையங்கங்களைக் கூர்ந்து ஒரு முறைக்கு இருமுறை படித்துப் பார்த்தேன்.

அவ்விரு கட்டுரைகளின் மூலம் தேர்வு முறை கூடாது என்பது தங்கள் கருத்து என்று புலனாகிறது. அவ்வுயரிய எண்ணத்தை வரவேற்கிறேன். அதற்குத் தாங்கள் கண்டு பிடித்துள்ள குற்றவாளிகள் உண்மைக் குற்றவாளிகள் அல்லர்.

மாணவர் உள்ளம் புதிய புதிய புத்தகங்களையும் வகுப்புகளையும் ஆண்டுதோறும் காணவே துடிக்கிறது. ஒரே பாடம் சம்பந்தப்பட்ட புத்தகங்களை எடுத்துக் கொண்டால், ஆசிரியர் அதில் உள்ள சில கருத்துக்களை முக்கியமானவை என்று கருதலாம். அதே கருத்துக்களுள் சிலவற்றையே சில மாணவர் ஏற்கக் கூடும். வேறு சில கருத்துக்களை மாணவர் உயர்வாகக் கருதக் கூடும். தேர்வு நடத்துவோர் விடுக்கும் வினாக்கள் தேர்வாளர் முக்கியமென்று கருதுவதில் அமைந்து, மாணவர் முக்கியமென்று விரும்பிப் படித்தவற்றில் வினா வராவிடிலோ, மாணவர் விடை யளிக்க முடியாமற் போய்த் தேர்வு பெற முடியாமற் போய் விடுகிறது. கேட்பவர் தம் மனப் போக்குக்கு ஏற்ப விடை யளிக்காத மாணவன் 'மண்டு' என்று தள்ளி விடுவதற்கில்லை. இம் முறையில் தேர்வு பெறாத மாணவன், மறு வருடமும் அதே புத்தகம் அதே வகுப்பில் படிக்கப் புகுங்கால் அவன் மனத்தில் அலட்சியம் குடி புகுந்து, சென்ற வருடத்தை விட நடப்பு வருடத்தில் புள்ளி குறைத்தே வாங்குகிறான். வகுப்பு மாற்றம் செய்வோர் எதிர்பார்க்கும் புள்ளி பெறாததால் அவ்வருடமும் அவன் தவறி விடுகிறான். இம்முறையில் மூன்றாவதாண்டு அதே வகுப்பில் பெற்றோர் வற்புறுத்தலுக்காகப் படிக்கிறான்.

சில பள்ளிகளில் மூன்றாண்டுகள் ஒரே வகுப்பை விட்டு மேல் வகுப்புக்குச் செல்லாமல் சத்தியாக்கிரகம் செய்யும் மாணவனை அவன் வாங்கியுள்ள புள்ளிகளைப் பாராமல் தேர்வு பெறச் செய்வதும் உண்டு. இந்த உண்மை மாணவர் ஒவ்வொருவரும் அறிந்துள்ளார்கள். மூன்றாவதாண்டு எந்த மாணவன் ஒரு வகுப்பில் படித்தாலும் அவனிடம் ஆசிரியர்கள் எச்சரிக்கையாகவே நடக்க வேண்டியிருக்கும். ஏனெனில் ''இந்த ஆண்டு தனக்கு நிச்சயம் தேர்வு கிடைக்கும்'' என்று நம்பி விடுவதால் தானும் படிக்காமல் பிறரையும் படிக்க விடாமல் வகுப்பில் தொல்லை கொடுத்துக் கொண்டே யிருப்பான். தேர்வுகளில் அவன் எழுதும் விடைத் தாளிலும் சம்பந்தமில்லாத பலவற்றையும் எழுதி விடுகிறான். ஏனெனில் 'மார்க்' வாங்காவிடினும் மூன்றாவதாண்டு என்பதற்காகத் தனக்குத் தேர்வு கிடைத்து விடுமல்லவா! இவ்வாறு நடக்கும் மாணவர்கள் பொது விதிக்கு முரணாக '0' மதிப்பு எண்களைப் பெற்றுத் தேர்வு பெறாது போவதுமுண்டு.

இதே நிலைதான் பள்ளியிறுதி மாணவர்களுக்குப் பொறுக்குத் தேர்வு இல்லை என்று கூறிய காலத்தும் நடைபெற்றது. பொறுக்குத் தேர்வு என்ற ஒன்றிருப்பதால் மாணவர் நவம்பர் டிசம்பர் மாதங்களில் முனைந்து படிக்கின்றனர். பின்னர் மார்ச் பரீட்சையில் நல்ல புள்ளிகளைப் பெற்றுத் தேர்வு பெறுகின்றனர். ஐந்தாம் படிவம் வரையில் அசடா யிருந்தவன் கூட, பள்ளியிறுதி வகுப்பில் பொறுப்புணர்ந்து படித்துத் தேர்வு பெறுகிறான்.

பொறுக்குத் தேர்வு இல்லை என்ற காலத்து நடைபெற்ற மாணவர் அசட்டைகளைக் கூற முடியாது. முதலில், அவர்கள் தம் படிப்பில்மோசமானார்கள். டிசம்பர் தேர்வு வரையில் கூட அவர்கள் படிப்பதில்லை. அதில் நடைபெறும் தேர்வுக்குச் சிலர் வருவதில்லை. அப்படி வருவோரும் தத்தம் திறமைக் கேற்ப விடை யளிப்பதில்லை. ஏன்! பொறுக்குத் தேர்வு இல்லையல்லவா!

அடுத்து, ஆசிரியர்களை அவமதித்தல்; அவர்களால் பொறுக்குத் தேர்வில் நிறுத்த முடியாது என்ற அலட்சியம். சுமாரான புள்ளிகள் பெறக் கூடிய மாணவனுங்கூட இந்த அலட்சியங்களுக்குள்ளாகி, அரசாங்கப் பொதுத் தேர்வுக் குரிய பாடங்களை மார்ச் மாதத்தில் படிக்கத் தொடங்கி, தேர்வு பெற முடியாமற் போகிறான். டிசம்பர் மாதத்தில் பொறுக்குத் தேர்வு இருப்பின், முயற்சி குன்றிய பையனும், ஆரம்பத்திலேயே படிக்கத் தொடங்கி வெற்றியும் பெறுகிறான். பொறுக்குத் தேர்வு இல்லாத ஆண்டில் வெற்றி பெற்ற மாணவரும் அவ்வளவாக நிரம்ப மதிப்பு எண் பெற்று விட வில்லை என்பது ஈண்டு கவனிக்கத் தக்கது.

பொறுக்குத் தேர்வின்றி விடப்பெற்ற மாணவர் தகுதியான அளவில் தேர்வு பெறாவிடின், அதற்குக் காரணங் கேட்டு விடுவார்கள் மேலதிகாரிகள். பின்னர் அந்தப் பள்ளிக்கே அப் பெயர் ஒரு சாபக் கேடாய் முளைத்து அதில் வேலை பார்க்கும் அத்தனை ஆசிரியர்களும் மோசம் என்ற நிலை வரும். இவற்றுக் கெல்லாம் பயந்துதான் தலைமை ஆசிரியர்கள் பொறுக்குத் தேர்வு இருந்து தீர வேண்டுமென்று கூறினர். அப்படியும் பொறுக்குத் தேர்வில் தேர்வு பெற மாணவர் முன்னிலையில் வைக்கப்பெறும் தகுதி மதிப்பு எண் 20% சில பள்ளிகளில் 15% என்று பார்த்து, தகுதியுடையவ ராக்குகின்றனர்.

1939-ல் நான் ஆங்கிலத்தில் மட்டுமே 37% பெற்று மற்றைய பாடங்களில் 50-க்கு மேல் பெற்றிருந்தும் எனக்குத் தேர்வு எழுதும் தகுதி யளிக்கப் பெறவில்லை. ஆயினும் அன்றெழுந்த வெறுப்பு இன்றளவும் எனக்கு மாறாததால் எஸ். எஸ். எல். சி. எழுதவில்லை. அன்றுள்ள நிலையோடு இன்றையப் பொறுக்குத் தேர்வு முறையை ஒப்பிட்டுப் பார்த்தால் இது அவ்வளவு கொடுமையுடையதல்ல என்றே நினைக்கிறேன்.

தலைமை ஆசிரியர்கள், கடமை, கட்டுப்பாடு, கண்ணியம் ஆகியவற்றை மாணவர்களிடையே தோற்றுவிக்கவே பொறுக்குத் தேர்வு முறை வேண்டுமென்றனர். ஆனால் தேர்வு முறையில் முன்னிருந்த கடுமை இப்பொழுதில்லை.

ஜில்லாதோறும் பள்ளிதோறும் கீழ் வகுப்புகளில் பாட புத்தகங்கள் வேறு வேறாயிருந்து, அரசாங்கப் பொதுத் தேர்வில் தான் ஒரே மாதிரியான பாட புத்தகங்களையும் தேர்வு முறையையும் காண்கின்றனர். அதனால், யாரோ ஒருவர் ஒரு முறையைப் பின்பற்றிச் சொல்லிக் கொடுத்த பாடத்தில் அரசாங்க முத்திரை பெற்ற ஒருவர் கேட்கும் கேள்விகளுக்குச் சரியான பதில் அளிப்பவரே தேர்வு பெறும் தகுதியுடையார் என்றால் அது முறையாகுமா?

1. சான்றாக, தமிழில் தேர்வுக்குரிய புத்தகத்தில் ''பசுங் குருத்தை நக்கக் குழல் என்றஞ்சி'' என்ற வரியில் நக்கக்குழல் என்னும் தொடருக்குப்

## உல்லாசப் பிரயாணம்!




பாம்புக் குட்டி என்பாரும், பறவை யடிக்கும் கக்குத்தான் என்னும் கருவி என்பாரும் உண்டு. இவற்றுள் ஒன்றை மனத்துள் கொண்டு கேள்வி கேட்டால் ஒரு பகுதி மாணவரே தேர்வு பெறுவர்.

2. கம்ப ராமாயணப் பகுதியில் "வந்தெதிரே தொழுதானை வணங்கினன்" என்னும் வரிக்கு வந்தது பரதன்-வணங்கியது குகன் என்றும்; வந்தது குகன்—வணங்கியது பரதன் என்றும் இரு கருத்துக்கள் தக்க ஆதாரத்துடன் விளங்குகின்றன எனின், இம் முறையான இடத்தில்தான் முக்கிய கேள்வி கேட்கும் இடமும் அமைந்து அவ்வாறே நிகழ்கின்றன. ஆதலின், சொல்லிக் கொடுப்பவரே வினாத்தாள் தயாரிப்பவராயும் விடை திருத்துபவராயும் அமையின் நலமாகும் என்ற கருத்தில்தான் தலைமை ஆசிரியர்கள் அரசாங்கப் பொதுத் தேர்வே வேண்டாமென்று கூறுகின்றனர். பொதுக்குத் தேர்வு வேண்டுமென்று கூறியதில் எள்ளளவும் முரண்பாடு இருக்க நியாயமில்லை.

1. தேர்வு முறையின் கொடுமை குறைய ஒரு யோசனை. பாட சம்பந்தப்பட்ட நூலிலிருந்து 50 அல்லது 100 கேள்விகளை அச்சடித்துக் கொடுத்து, அவற்றுள் 25 கேள்விகளுக்கு விடை எழுதலாமென வைத்து, திருத்துவோர் 20-க்கோ 15-க்கோ சரி பார்த்தால், மாணவர் தத்தம் திறமைகளைக் காட்ட ஏதுவாகும்.

2. குறுகிய நேரத்தில்—கேள்வித் தாளுக்குரிய விடையை அவரவர் புத்தகத்திலிருந்து பார்த்துச் சரியான விடையை எழுதச் செய்யலாம்.

படிப்பு என்பது அறிவின் தன்மையை வளர்க்கவே யன்றி அகராதியாக ஆக்க அல்ல.

யார் ஆண்டாலும் ஆளுந் தன்மையில் உள்ள நன்மை தீமைகளை மட்டுமே கூற வேண்டும். ஆளுவோர் மீதுள்ள வெறுப்பு விருப்புகளுக்குத் தாங்கள் இடமளித்து எழுதுதல் கூடாதென்று கேட்டுக் கொள்கிறேன்.

பட்டுக்கோட்டை
1—6—54

க. சுப்பிரமணியம்

[தற்காலக் கல்வி முறை சம்பந்தமான நம் கருத்துக்கள் சென்ற இருபத்தைந்து ஆண்டு காலமாக மாறுதலின்றி இருந்து வருகின்றன. மாற்றம் அடைவதற்குப் போதிய காரணங்கள் ஏற்படவில்லை. பரீட்சைகளின் பயனற்ற தன்மை பற்றியும், அவற்றினால் விளையும் கேடுகளைப் பற்றியும் நீண்ட காலமாக எழுதி வந்திருக்கிறோம். ஆள்வோர் மாறுதலுக்கும் இதற்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. தாங்கள் எழுதியிருப்பவையெல்லாம் பரீட்சைகள் சம்பந்தமான நம் கொள்கைகளுக்கே ஆதரவு தருகின்றன. பிள்ளைகளுக்குப் படிப்பில் ஆர்வம் உண்டாக்காத கல்வி முறை சரியான கல்வி முறை அன்று; கட்டாயப் படுத்தியும் பயப்படுத்தியும் போதிக்கும் கல்வி உண்மையான கல்வி அன்று. ஆசிரியர்களிடம் மாணாக்கர்களுக்கு இயற்கையாக அன்பும் மதிப்பும் உண்டாக்க இயலாத பள்ளிக்கூடம், பள்ளிக்கூடம் அன்று; அது சிறைக் கூடந்தான்.—இவை நம் உறுதியான கருத்துக்கள். இக் கருத்துக்களை, எழுதுவோர் யார் என்பதைக் கருதாமல், தாங்களும் சிந்தித்துப் பார்க்க வேண்டும். பரீட்சைகள் எல்லாம் உடனே ஒழிந்துவிடும் என்று நாம் எதிர்பார்க்கவில்லை. முதலில் பரீட்சை பற்றி மக்களின் மனோ நிலை மாற வேண்டும். பின்னர், கல்வி முறையும் பள்ளிக்கூடங்களும் சீர் திருத்தப்பட வேண்டும். ஆசிரியர்களின் நேர்மையில் மாணவர்களுக்கும் மக்களுக்கும் பூரண நம்பிக்கை ஏற்பட வேண்டும். பிறகுதான் பரீட்சைகளை அடியோடு ஒழிக்க முடியும். — ஆசிரியர்]

# உங்கள் ஊர்ப் பஞ்சாயத்து

## கட்டுரைப் பரிசுப் போட்டி

சுமார் ஒரு வருஷத்துக்கு முன்பு தமிழ் நாட்டுக் கிராமங்கள் பலவற்றில் புதிய பஞ்சாயத்துச் சட்டத்தின்படி கிராமப் பஞ்சாயத்துக்கள் அமைக்கப் பட்டன. கிராமங்களில் வயது வந்தோர் அனைவரும் கூடி, சர்வஜன வாக்குரிமை அடிப்படையில், பஞ்சாயத்து அங்கத்தினரையும் பஞ்சாயத்துத் தலைவர்களையும் தேர்ந்தெடுத்தார்கள். முன்னொரு காலத்தில் 'யூனியன்' என்று அழைக்கப்பட்டுப் பிறகு மேஜர் பஞ்சாயத்து என்று ஆன பெரிய பஞ்சாயத்துச் சபைகள், 'மைனர்' பஞ்சாயத்து என்று குறிப்பிடப்பட்ட சிறிய கிராமங்களின் பஞ்சாயத்துச் சபைகள் எல்லாமாகச் சேர்ந்து தமிழ் நாட்டின் பதினொரு ஜில்லாக்களிலும் சில ஆயிரம் பஞ்சாயத்துச் சபைகள் அமைக்கப்பட்டு வேலை செய்து வருகின்றன. கிராமங்களின் முன்னேற்றத்துக்குரிய பல ஆக்க வேலைகளைச் செய்வதற்கும், அவற்றுக்காகப் புதிய வரிகள் போட்டு வசூலிப்பதற்கும் பஞ்சாயத்துக்களுக்கு அதிகாரங்கள் அளிக்கப் பட்டிருக்கின்றன.

இவ்வாறு சுமார் ஓராண்டு காலமாக இயங்கி வரும் பஞ்சாயத்துச் சபைகளின் வேலைகளைப் பற்றி நேயர்களின் கருத்தை அறிவதற்காக இந்தக் கட்டுரைப் பரிசுப் போட்டியை ஏற்படுத்துகிறோம்.

கட்டுரைகளில் குறிப்பிட்டு அபிப்பிராயம் தெரிவிக்க வேண்டிய அம்சங்களுக்குக் கீழே சில உதாரணங்கள் தந்திருக்கிறோம்:—

1. உங்கள் ஊரில் ஏற்பட்டுள்ள பஞ்சாயத்து நல்ல முறையில் நிர்வாகம் நடத்தி வருகிறதா?

2. உங்கள் ஊரில் புதிய முறையில் பஞ்சாயத்து ஏற்பட்ட பிறகு கிராம வாழ்க்கையில் உண்மையான முன்னேற்றம் காணப் படுகிறதா? எந்தெந்தத் துறையில் முன்னேற்றம் காணப் படுகிறது?

3. உங்கள் ஊர்ப் பஞ்சாயத்தின் தலைவர் அந்தப் பதவிக்குத் தகுதியுடையவர் என்று கருதுகிறீர்களா? அவர் தம்முடைய கடமைகளைச் சரிவர ஆற்றி வருகிறாரா? அவர் பஞ்சாயத்துத் தலைவர் ஆன பிறகு ஊர் ஜனங்களிடையில் அவருடைய செல்வாக்கு வளர்ந்திருக்கிறதா? அல்லது குறைந்திருக்கிறதா?

4. உங்கள் ஊர்ப் பஞ்சாயத்தின் அங்கத்தினர்கள் தங்கள் கடமைகளைத் திருப்திகரமாகச் செய்து வருகிறார்களா?

5. உங்கள் ஊரில் பஞ்சாயத்து ஏற்பட்ட பிறகு என்னென்ன புது வரிகள் விதித்திருக்கிறார்கள்? அந்த வரிகள் நியாயமான வரிகளா? வரி வசூல் சரியாக நடந்து வருகிறதா? வசூலித்த வரிப் பணம் நல்ல முறையில் பொதுஜன நன்மைக்கு உகந்த காரியங்களுக்காகச் செலவழிக்கப் பட்டு வருகிறதா?

6. பஞ்சாயத்தார் செய்யத் திட்டமிடும் பொது நன்மைக்கு உகந்த காரியங்களுக்குச் சர்க்கார் அதிகாரிகள் அனுகூலமாக இருக்கிறார்களா? அல்லது வீண் தாமதம் செய்தும் அநாவசியமான ஆட்சேபங்களைக் கிளப்பியும் முட்டுக் கட்டை போட்டு வருகிறார்களா?

உதாரணமாக, ஊரில் குடி தண்ணீருக்காக ஒரு கிணறு எடுக்க வேண்டும் என்றோ, தூர்ந்து போன குளத்தை வெட்டி ஆழமாக்க வேண்டும் என்றோ, பஞ்சாயத்தார் திட்டமிட்டால், அதை நிறைவேற்ற மேலதிகாரிகளிடமிருந்து நியாயமான கால வரம்புக்குள் அனுமதி கிடைக்கிறதா?

அல்லது அதிகாரிகளின் மதமதப்பினால் திட்டங்களை நிறைவேற்றுவதில் வீண் காலதாமதம் ஏற்படுகிறதா?

7. இப்போது நடப்பதை விட நல்ல முறையில் தீவிரமாகக் கிராம நலத்துக்குகந்த காரியங்களைச் செய்ய முடியுமா? அப்படியானால் அவ்விதம் செய்யும்படி பஞ்சாயத்தாரைத் தூண்டுவதற்கு என்ன என்ன முறைகளைக் கையாளலாம்?

8. சர்வ ஜன வாக்குரிமை அடிப்படையில் கிராம ஜனங்களை ஒன்று கூட்டி, கையைத் தூக்கச் செய்து பஞ்சாயத்துத் தலைவரைத் தேர்ந்தெடுக்கும் முறை நல்ல முறை என்று நீங்கள் கருதுகிறீர்களா? அல்லது சட்டசபைத் தேர்தல்களில் நடப்பது போல், இரகசியமாக வோட்டுப் பெட்டியில் வோட்டுப் போடும் முறையையே பஞ்சாயத்துத் தேர்தலுக்கும் உபயோகிக்க வேண்டும் என்று நினைக்கிறீர்களா?

9. பஞ்சாயத்துக்களுக்கும் பஞ்சாயத்துத் தலைவர்களுக்கும் இப்போது அளிக்கப்பட்டிருக்கும் அதிகாரங்களையும் பொறுப்புக்களையும்விட அதிகமாகக் கொடுக்கலாமா?

10. சமீபத்தில் அகில இந்திய காங்கிரஸ் காரியக் கமிட்டியின் காரியதரிசி கிராமப் பஞ்சாயத்துக்களுக்குக் குற்ற விசாரணை செய்து நியாயத் தீர்ப்புச் சொல்லும் உரிமை அளிக்க வேண்டும் என்று ஓர் அறிக்கை விட்டிருக்கிறார்.

நீங்கள் இதை அங்கீகரிக்கிறீர்களா? அல்லது கிராமப் பஞ்சாயத்தாரிடம் நீதி மன்றத்தின் பொறுப்பையும் அளித்தால், பட்சபாதமான தீர்ப்புக்கள் ஏற்பட ஏதுவாகும் என்றும், தங்களுக்கு வோட்டுக் கொடுத்து ஆதரித்தவர்கள் பக்கம் தீர்ப்புச் சொல்லுவது என்று ஏற்பட்டு விடும் என்றும் கருதுகிறீர்களா?

மேலே குறிப்பிட்ட பத்து அம்சங்களைப் பற்றியும், இன்னும் உங்கள் ஊர்ப் பஞ்சாயத்தைப் பற்றி உங்கள் விசேஷ அபிப்பிராயங்களையும் கட்டுரைகளில் எழுதி அனுப்பலாம்.

அந்தந்த ஊரில் உள்ளவர்கள் அவரவர்கள் ஊர்ப் பஞ்சாயத்து நிர்வாகத்தைப் பற்றி எழுதுவது மிகப் பொருத்தமாயிருக்கும். ஆனால் பக்கத்து ஊர்ப் பஞ்சாயத்துக்களைப் பற்றியும் நேரில் சென்று விசாரித்துத் தக்க ஆதாரங்களுடன் கட்டுரை எழுதலாம்.

ஜூலை 5- உக்குள் கட்டுரைகள் "கல்கி" காரியாலயத்துக்குள் வந்து சேர வேண்டும்.

அவற்றுள் மிகச் சிறந்தது என்று ஆசிரியரால் கருதப்படும் கட்டுரைக்கு ரூ 25 பரிசு அளிக்கப் படும். மற்றும் மூன்று சிறந்த கட்டுரைகளுக்கு ரூ 15 வீதம் தரப்படும்.

இன்னும், பிரசுரத்துக்குத் தகுதியாயுள்ள கட்டுரைகள் எல்லாம் பிரசுரிக்கப்படும்.

மேல் உறையில், "பஞ்சாயத்துக் கட்டுரை" என்று தயவுசெய்து குறிப்பிடவும்.

நண்பர்கள் உங்கள் வீட்டுக்கு வரும்போது...



**நினைவில் இருக்கட்டும்**

உபரி விடமின் சத்து சேர்க்கப்பட்ட பிரிட்டானியா பிஸ்கோத்துகள், இளைஞர், முதியோர் யாவராலும் விரும்பப்படுகிறது.

'பிக்ஸ்' தினுசை ருசி பாருங்கள். கரகரப்பாகவும், உப்பிட்டு ருசிகரமாயுள்ள இந்த பிஸ்கோத்துகளை விரும்புவீர்கள்.




**சிறந்த பிஸ்கோத்துகள்**

# பிரிட்டானியா

BBX ITM




அஜீரணம் வாழ்க்கையே துன்பமயமாக்கி விடுகிறது; வயதுக்கு மீறிய வயோதிகத் தோற்றமும் உண்டாக்கிவிடுகிறது. மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பௌடர் துரிதமான நிவாரணம் தருகிறது. ஏனெனில் அது ஒரு அபூர்வச் சிறப்புடைய பௌடர்; சாஸ்திரீகமான தயாரிப்புத் திட்டப்படி பக்குவமான பொருட்சேர்க்கையுள்ள இந்தப் பௌடர் மூன்று வேலைகள் செய்கிறது—மிருதுவான இரைப்பைக்குச் சமனமூட்டுகிறது; வயிற்றுப் புளிப்பை மாற்றுகிறது; வலியையும் நிறுத்துகிறது.




மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பௌடர் என்று பெயரைச் சொல்லிக் கேளுங்கள். ஒவ்வொரு பாக்கெட்டிலும் Alex C. Maclean "அலெக்ஸ் ஸி. மக்ளீன்" என்ற உண்மைக் கையெழுத்தும் தத்ரூபமாக அச்சிடப் பட்டுள்ளதா என்று நிச்சயம் படுத்திக் கொள்ளுங்கள்.

# மக்ளீன்

## பிராண்ட் ஸ்டமக் பவுடர்

எப்பொழுதும் கையில் ஒரு பாட்டில் வைத்திருங்கள்.

**ஒரு டோஸ்**

அஜீரணத்தாலேற்படும் வயிற்றுவலி, உடற்பருமன், இருதய எரிச்சல், வயிற்று மந்தம், வாந்தி இவற்றைச் சடுதியில் குணப்படுத்தும்.




மாடியிலிருந்த தன் அறையை அடைந்து அவன் கதவைத் திறந்தபோது அத்தனை பெரிய பங்களாவில் நிலவியிருந்த அந்த அசாதாரண அமைதி அவனுக்குப் பெரும் திகைப்பை யளித்தது. எல்லோரும் வெளியே சென்றிருக்க நியாயமில்லை. அறைக் கதவுகள் எல்லாம் திறந்திருக்கின்றன. யாராவது வீட்டில் நின்றிருக்க வேண்டும்.

'டக்'கென்று பூட்டை அவன் திறந்தபோது, மாடிப் படிகளில் புடவையின் சலசலப்புத் தொனி கேட்டது. மாடிப் படிகளை இரண்டே எட்டில் கடந்து வேகமாக ஏறி வந்துகொண்டிருந்தாள் வாஸந்தி. படத்தை விரித்துச் சீறிக் கொண்டிருந்த சர்ப்பத்தைச் சந்தித்து விட்டாற் போன்ற அச்சத்துடன் அவன் கதவைப் படீரென்று திறந்து உள்ளே நுழைந்து அதே வேகத்தில் சாத்தித் தாளிட முயன்றபோது, கைகளை விரித்துக் கதவுகளைச் சாத்த இயலாமல் மறித்தவாறு வாயிற்படி யருகில் வந்து நின்று அவனை ஏற இறங்கப் பார்த்தாள் அவள். "வீட்டில் அப்பா அம்மா யாருமில்லை......வெளியே சென்றிருக்கிறார்கள்...நீங்கள் வெளியேயிருந்து நேரங் கழித்து வருவீர்கள் என்று தெரிந்து உங்களுக்குக் கதவைத் திறப்பதற்காக நான்மட்டும் வீட்டிலிருந்தேன்..."

"எனக்காகக் கண் விழித்திருந்ததற்கு நன்றி. சிரமத்துக்கு மன்னியுங்கள்..."—அவன் கதவைச் சாத்துவதற்காகச் சென்றபோது, அவள் ஏகத் தாளமாகச் சிரித்தாள்.

"உங்களிடம் இன்றைக்கு நான் கடைசியாக, முடிவாகக் கேட்டுவிட வேண்டும் என்ற ஆசையில் தான் வீட்டில் தங்கினேன்......"

"நீங்கள் ஒருமுறை யல்ல. ஒன்பது லக்ஷம் முறைகள் கேட்டாலும் சரி...என் பதில் ஒரே பதில்தான்..."

"...அதாவது...'முடியாது'... அப்படித்தானே! உங்கள் பாறை நெஞ்சில் அந்தப் பிச்சைக்காரிக்குத்தான் இடம். அப்படித்தானே !..." — ஆக்ரோஷத்துடன் மொழிந்து புருவங்கள் நெரிய அவனைப் பார்த்துவிட்டுச் சரசர வென்று அந்த இடத்தை விட்டுச் சென்றாள் வாஸந்தி.

அவள் சென்றதும் ராமகிருஷ்ணன் நீண்டதொரு பெருமூச்செறிந்தான். அறைக் கதவைத் தாளிட்டு விளக்கை அணைத்துவிட்டுப் படுத்தபோது அவன் நெஞ்சிலும் காரிருள் சூழ்ந்தது. அவனைச் சூழ்ந்துகொண்டிருந்த இருளில் இரு கண்கள் அவனையே சுட்டெரித்து விடுவன போல நின்று நோக்கிக்கொண்டிருப்பதைப் போன்ற பிரமை எழுந்தது. வயிற்றுப் பிழைப்புக்காக ஊரை விட்டு, உற்றாரை விட்டுப் பல மைல்கள் கடந்து வந்துள்ள தனக்கு இத்தகைய ஒரு சங்கடமும் சிக்கலும் நிறைந்த வாழ்க்கை அமையும் என்பதைக் கனவிலும் நினைத்தவனல்ல. அல்லும் பகலும் தன்னைக் கறையான் போல் அரித்துவரும் அந்தக் கவலைக்கு ஈடு கொடுக்க முடியாமல் திணறினான் அவன்.

•• •• ••

ராமகிருஷ்ணனுக்கு உலகத்தில் இருந்த அன்புப் பிடிப்புகள் இரண்டு. ஒன்று, அவனைப் பெற்று வளர்த்துப் பரிவுடன் காத்த அன்னை. மற்றொன்று அவனைக் கொழு கொம்பாகக் கொண்டு அவனைச் சுற்றிப் படர்ந்து, தன் வாழ்வு அவன் வாழ்வு இரண்டையும் பசுமையுறச் செய்ய ஆர்வத்துடன் ஏங்கி நிற்கும் பேதைப் பெண் ராதை. அத்தை கமலத்தைத் தவிர வேறொரு ஆதரவுமற்ற அபலை அவள். முல்லை பூத்தது போன்று கன்னங் குழியச் சிரித்தவாறு, கள்ளங்கபடமற்று வளர்ந்து நிற்கும் அவளிடம் தன் உயிரையே வைத்திருந்தான் ராமகிருஷ்ணன். படிப்பை முடித்து விட்டு வேலைக்காக எங்கெங்கோ அலைந்து கடைசியாகச் சென்னையிலுள்ள பெரிய நெசவுத் தொழிற்சாலை ஒன்றில் வேலைக்காக மனுப் போட்டு, வேலை ஒப்புக்கொள்ளும்படி ஆர்டரும் வந்து விட்டது அவனுக்கு.

பிரியும்போது கமலம் மாலை மாலையாகக் கண்ணீர் வடித்தாள். ஆனால் ராதை, பொங்கி எழுந்த துயரத்தை நெஞ்சின் ஆழத்தில் போட்டு மூடி முகத்தில் மலர்ச்சியைப் படர விட்டாள். "அத்தான்! எனக்கு...என் வாழ்வுக்கு நீங்கள் தெய்வம்! எங்களை மறந்து விடாதீர்கள்! இதோ புதிய ஊரில் போய்ச் சேர்ந்து வேலை, சம்பள நிலவரம் புரியும்வரை உங்கள் கைச் செலவுக்கு!..." அவன் நீட்டிய கரத்தில் ரூபாய் நோட்டுக் கற்றைகள், பளிங்கு போன்ற அவள் கழுத்து வெளிச் சென்றிருந்தது. "சங்கிலியை விற்று

விட்டேன் அத்தான்! ...... உங்கள் செலவுக்குக் கூடப் பயன்படாத அது எதற்கு!......"—அவள் கண்களில் அன்பு பிருந்து வழிந்தது. "...அத்தான்!...சென்னை நகரம் எத்தனை பெரியது! அங்கே உங்களுக்கு எவ்வளவோ சிநேகங்கள் ஏற்படக் கூடும். எத்தனையோ செல்வவந்தர் வீட்டுப் பெண்களைப் பார்ப்பீர்கள். அப்போதும் உங்களுக்கு இந்த ராதை அழகியாகத் தோன்றுவாளா!...நீங்கள் மனசு மாறி அடியோடு என்னை மறந்து விட்டால்...!"—அவள் நெஞ்சு உடைந்து கண்ணீர்ப் பிரவாக மெடுத்தது.

"ராதை! என் அன்பில் உனக்கு இத்தனை தானா நம்பிக்கை! நான்தான் ஊருக்குச் செல்லுகிறேனே தவிர உன் மாசற்ற அன்பு ஆழப் பதிந்துள்ள என் 'உள்ளத்தை' உன்னிடம், இங்கேதானே விட்டு விட்டுப் போகப் போகிறேன்!" — அவள் கன்னத்தைப் பரிவுடன் வருடினான் ராமகிருஷ்ணன்.

அவன் வேலை ஏற்றுக் கொண்ட சில நாட்களுக்குப் பின்பு ஒரு நாள் தொழிற்சாலை நிர்வாகத்தை மேற்பார்வையிட வந்த முதலாளி ஜகதீசனின் பார்வையில் ராமகிருஷ்ணன் தனிப்பட்டதொரு கவர்ச்சியுடன் விழுந்தான். அவனையும் அவனுடைய நேர்மை நிறைந்த உழைப்புத் திறனையும் பற்றி மானேஜர் மூலம் அறிந்து கொண்ட அவர் அன்று மாலை அவனைத் தனியே அழைத்தார். சில மணி நேரங்கள் அவனுடன் உரையாடிய அவர் இறுதியில் அவன் முதுகை அன்புடன் வருடிக் கொடுக்கும் அளவுக்குத் தம் பதவி, அந்தஸ்து, செல்வாக்கை மறந்து விட்டார்.

"ராம கிருஷ்ணு! என்னை உன் தந்தைபோல் எண்ணிக் கொள். உனக்கெவ்வித ஆக்ஷேபணையும் இராத பட்சத்தில் என் பங்களாவில் ஒரு அறை எடுத்துக் கொண்டு நிம்மதியாக, சௌக்கியமாக இருக்கலாம். இப்படி ஹோட்டல் வாசத்தில் தவிப்பானேன்!..." என்று அன்பொழுகக் கேட்டபோது ராம கிருஷ்ணனுக்கு எல்லாம் ஏதோ ஓர் கனவு போல் தோன்றியதே தவிரக் கொஞ்சத்தில் நம்ப முடியவில்லை.

ஹோட்டல் வாசத்துக்கு விடை கொடுத்து விட்டு, அழகான தோட்டம் சூழ்ந்த ஒரு பெரிய பங்களாவில் தன் புதிய வாழ்க்கையைத் தொடங்கியபோது அவன் வியப்புக் கடலில் மூழ்கி மூழ்கி எழுந்தான். அந்த மகிழ்ச்சிக்குரிய செய்தியை முதல் வேலையாக ராதைக்கு எழுதினான்.

அன்னியர் வீடு என்ற கூச்சம் ரொம்பவும் சங்கோசப்படச் செய்தது அவனை. குனிந்த தலை நிமிராமல் அடக்க வொடுக்கமாக வாழும் அவனை ஜகதீசன் பாராட்டி மகிழ்ந்தார். ஆனால் அதற்கு மாறாக அவனுடைய போற்றத் தக்க இயல்புகளை விஷமென வெறுத்து, உள்ளுக்குள் பொருமிக் கொண்டிருந்த ஆத்மா ஒன்றும் அந்த பங்களாவில் இருக்கத்தான் செய்தது. அதுதான் ஜகதீசனின் அருமைக் குமாரி வாஸந்தி. இண்டர் வரை படித்து முடித்தவள். பார்ப்பதற்கு நல்ல அழகி. அவளுடைய அந்த அழகின் அகம்பாவத்தைப் பரிபூரணமாகப் பிரதிபலிக்கும் முகம். 'அடக்குமுறை' என்ற அஸ்திரம் யாராலும் என்றுமே பிரயோகிக்கப்படாத சுதந்திர நிலையில் தன்னிச்சையோடு வளர்ந்தவள். ஆனந்தமாக வாழப் பிறந்தவள்.

சிவந்த நிறமும், சுருண்டு அலைபோல் படிந்த கிராப்புத் தலையும், கவர்ச்சியான முக வெட்டும் கொண்ட ராமகிருஷ்ணனின் தோற்றம் வாஸந்தியின் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தது. அழகும், அறிவும் ஒருங்கே அமையப்பெற்றிருப்பினும், தனி மனிதன் என்ற காரணத்தால், அவனைக் கணவனாக அடைந்தால், தன் அந்தஸ்துகாரணமாக அவனைத் தனக்குக் கட்டுப்படுத்தி அடக்கியாளலாம் என்று அவள் உள்ளம் கோட்டை கட்டியது. அவளுடைய அந்த ஆசையை மேலும் தூண்டி விட்டவன் அவன்தான். ராமகிருஷ்ணனின் கவனத்தைக் கவர அவள் எத்தனையோ விதமான வழிகளை அனுசரித்துப் பார்த்தாள். அவன் காரியாலயத்திலிருந்து வீடு திரும்பும் சமயம் பார்த்து, தன்னை அழகாக அலங்கரித்துக் கொண்டு பங்களா வாசலில் நின்று கொண்டிருப்பாள். தன்னைக் கொஞ்சமும் லட்சியம் செய்யாமல் அவன் உள்ளே நுழையும்போது அவள் இதயம் விம்மும். அவன் நடக்கும் வழியில் எல்லாம் நின்று நின்று, "கொஞ்சம் வழிவிடுகிறீர்களா!..." என்று கேட்க வைத்து அவனைத் தன்னிடம் பேச வைப்பாள். இதில் அவளுக்கு ஒரு சந்தோஷம்.



"அடே அப்பா! நானும் வந்த நாள் முதல் கவனிக்கிறேன். ஒரு வார்த்தை 'நீயார்' 'என்ன' என்றுகூட என்னைக் கேட்கத் தோன்றவில்லையே

உங்களுக்கு!......இந்தப் பங்களாவில் யார் யார் இருக்கிறார்கள் என்று தெரிந்துகொள்ளும் ஆர்வம் சிறிதும் இல்லையே உங்களுக்கு! வியப்பாகத்தான் இருக்கிறது எனக்கு உங்கள் மனப் போக்கு...''

திடுதிப்பென்று ஒருநாள் ராமகிருஷ்ணனிடம் அவள் தானாகவே இப்படிப் பேச்சைத் தொடங்கியபோது அவன் வியப்பினால் அயர்ந்துவிட்டான். '' அப்பாவின் தொழிற்சாலையில் வேலை பார்க்கும் சிப்பந்திகளில் இதுவரை யாரும் உங்களைப் போல் நடந்து கொண்டதில்லை. அவர்கள் எல்லோரும் எங்களிடம் மிகவும் மரியாதை காட்டுவார்கள்.''

விவாகமாகாத ஒரு இளம் பெண், முன் பின் அறியாத ஒரு வாலிபனிடம் முதன் முதலாகத் தானாகவே பேச முற்பட்டு, இத்தனை சுவாதீனமாகப் பேசக் கூடும் என்பதை அவன் கனவிலும் நினைத்தவனல்ல. தராசு முனையில் நின்ற அவன் மனம் ராதையையும், அந்தப் பணக்காரப் பெண்ணையும் எடை போட்டது. அழகும், அடக்கமும் கூச்சமுமே உருவானவள் ராதை. கை நிறையக் காசு இருந்து விட்டால், இதயம், தன்னடக்கம் என்பன தேவையேயில்லை என்ற கொள்கையைக் கடைப்பிடிப்பவள் வாஸந்தி. ராமகிருஷ்ணனுக்கு அவளை நிமிர்ந்து பார்க்கவே கூச்சமாக இருந்தது.

'' அநாவசியமான ஆராய்ச்சியிலோ, விசாரணையிலோ இறங்கும் வழக்கும் எனக்குக் கிடையாது.'' மேலும் பேச்சை வளர்த்த விரும்பாதவன் போல் அவன் கதவைப் பூட்டிக் கொண்டு கிளம்பிய



போது அவமானத்தால் அகமும் முகமும் ஒருங்கே சிறுத்து விட்டது வாஸந்திக்கு. அந்தச் சம்பவம் நடந்தது முதல் ராமகிருஷ்ணன் கொஞ்சம் உஷாராக ஆரம்பித்து விட்டான். வாஸந்தியின் மனோபாவம் சிறுகச் சிறுகப் புரிந்து விட்டது அவனுக்கு. அதே சமயத்தில் கள்ளங் கபடற்ற அழகிய முகத்தில் ஏக்கமும் துயரமும் வழிய, ராதை தான் ஊருக்குப் புறப்படும் போது தீர்க்கதரிசி போல் கூறிய மொழிகள் அவன் சிந்தனையில் எதிரொலித்தன. '' அத்தான்! நீங்கள் போகுமிடத்தில் எத்தனையோ செல்வந்தர் வீட்டுப் பெண்களைப் பார்ப்பீர்கள். அப்போதும் உங்களுக்கு இந்த ராதை அழகியாகத் தோன்றுவாளா!......''

ராமகிருஷ்ணன் தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டான்: '' ராதை! நீ பட்டை தீட்டிய வைரம்! உன்னோடு, உன் பொன் உள்ளத்தோடு ஒப்பிட்டால்...இந்த வாஸந்தி ஒரு கண்ணாடிக் கல்......''

ஒரு நாள் மாலை. குளு குளுவென்ற ரம்மியமான காற்றில் தன்னை மறந்து லயித்தவாறு மாடியில் உலாவிக் கொண்டிருந்தான் ராமகிருஷ்ணன். ஹிந்தி மெட்டு ஒன்றை நாகரிகமாக முணு முணுத்துக் கொண்டு மாடியேறி வந்தாள் வாஸந்தி. சற்றும் எதிர்பாராத அவள் வரவால் திடுக்கிட்டு விட்ட ராமகிருஷ்ணன் தலை குனிந்தவாறே கீழே செல்லத் திரும்பினான்.

'' மிஸ்டர் ராமகிருஷ்ணன்! தயவு செய்து நில்லுங்கள் ஒரு நிமிஷம்!'' என்றாள் வாஸந்தி.

'' இப்படி ஒரு ஒதுக்குப்புறமான இடத்தில் தனித்து நிற்பது அழகல்ல, நான் போகிறேன்...''

வாஸந்தி நீண்ட தொரு பெருமூச்செறிந்தாள். '' மிஸ்டர் ராமகிருஷ்ணன்! உங்களிடம் நான் என் இதயத்தைத் திறந்து விடுகிறேன். உங்களை என்று நான் முதன்முதலாகக் கண்டேனோ, அன்றே என் உள்ளம் உங்களிடம் பறி போய் விட்டது. எனக்குப் பணம் தேவையில்லை. வேண்டியது இருக்கிறது. தாங்கள் எத்தனை ஏழையாக இருப்பினும் சரி, பணத்திலே புரளும் பெரிய செல்வந்தர் ஒருவரின் பெண்ணான நான் அப்பாவிடம் கூறி உங்களையே மணக்க நிச்சயித்து விட்டேன். இம்மாதிரியான என் வேண்டுகோளைத் தாங்களே கூற முந்துவீர்கள் என்று எதிர் பார்த்துத்தான் இத்தனை நாட்கள் பேசாமலிருந்தேன்'' — செல்வச் செருக்கினால், அவள் காதலை அவன் கை நீட்டி யாசிக்கவில்லை. கன்னத்தில் அறைந்தாற்போல் அதிகாரத்தில் பெறமுயன்றாள்.

'' என்னை மன்னித்து விடுங்கள்! உங்கள் காதலை ஏற்றுக் கொள்ள மறுப்பதால் உங்களுக்கு எந்த விதத்திலும் ஏற்ற கணவன் நான் இல்லை. என்னையே நம்பி, என்னிடத்தில் உயிரையே வைத்து, என்னை மணக்கக் காத்திருக்கும் என் மாமா பெண் - ஏழை ராதைக்கு நான் துரோகம் செய்ய முடியாது.''

'ஆ!'—உதட்டை அழுந்தக் கடித்துக் கொண்டாள் வாஸந்தி.

'' அந்த ராதை என்னைவிட உங்களுக்கு எந்தவிதத்தில் உயர்ந்தவள்! என்னிடம் இல்லாத எந்த அதிசய குண விசேஷத்தை அவளிடம் கண்டு விட்டீர்கள் நீங்கள்!''

" அவளும் என்னைப் போன்றே ஏழை. உங்கள் அந்தஸ்துக்கு, உங்களுக் கேற்ற கணவனைத் தேடிப் பார்த்து உங்கள் வாழ்க்கையை மலரச் செய்ய உங்களுக்குத் தாய், தந்தை, உற்றார் உறவினர், திரண்ட செல்வம் எல்லாம் அமைந்திருக்கிறது. ஆனால் ராதைக்கு என்னைத் தவிர இந்தப் பிரபஞ்சத்திலே வேறு பிடிப்பே கிடையாது. உங்களைப் போன்று அவளும் ஒரு பெண். அவள் நிலைமையைச் சிந்தித்துப் பாருங்கள்! அந்தத் திக்கற்ற பெண்ணை நான் மறந்து, துரோகம் செய்வது உங்களுக்கே நியாயமாகத் தோன்றுகிறதா!"

"ஆமாம், அவளுக்குத் துரோகம் செய்யக் கூடாது என்பதற்காக உங்களுக்கு வரும் மகத்தான அந்தஸ்தைத் தியாகம் செய்யப் பார்க்கிறீர்களே இப்போது! இத்தகைய ஒரு பெருத்த நஷ்டத்தை உங்களுக்கு உண்டாக்கும் அந்தத் துரோகியிடமா அன்பு!" — எரிமலை போன்று வார்த்தைகள் வெடித்துக் கிளம்பின.

"உங்கள் வாதம் என் உள்ளத்தை மாற்றாது. இது உறுதி. குழந்தையைப் பலாத்காரத்தினால் மிரட்டி அழச் செய்ய வேண்டுமானால் முடியுமே தவிர, சிரிக்கச் செய்ய முடியுமா! 'அன்பு, அனாயாசமாகப் பிறக்கக் கூடியதே யல்லாமல், அதிகாரத்திலோ வற்புறுத்தலிலோ உண்டாகக் கூடியதன்று!" — அவன் விடு விடு வென்று கீழே இறங்கிச் சென்று விட்டான். ராமனிடம் காதலுக்காக யாசித்து ஏமாற்றமடைந்த சூர்ப்பனகையைப் போன்ற கொதிக்கும் நெஞ்சுடன் வாஸந்தியை நிறுத்தி விட்டு.

அல்லும் பகலும் அனவரதமும் தான் ஆர்வத்துடன் பெற முயற்சிக்கும் அந்த அழகனின் இதய பீடத்தில் வீற்றிருக்கும் பேறு ஏற்கெனவேயே வேறு ஒரு பெண்ணுக்கு அனாயாசமாக அளிக்கப் பட்டு விட்டது என்பதை எண்ணிய போது அவள் உள்ளம் ஆத்திரத்தாலும் ஏமாற்றத்தாலும் உடைந்தது.

** ** **

அன்று காரியாலயம் விடுமுறை யாதலால் வெளியே எங்கோ சென்று விட்டு ராமகிருஷ்ணன் வீடுவந்தபோது அங்கே அவனுக்கு ஒரு பெரிய அதிர்ச்சி காத்திருந்தது. வீடு அல்லோல கல்லோலமாகி இரண்டுபட்டுக் கொண்டிருந்தது. வாஸந்தி தன்னுடைய அறையில் மேஜையின் மேல் கழற்றி வைத்து விட்டுச் சென்ற இரட்டை வடம் தங்கச் சங்கிலியைக் காணோம். எப்போது, எப்படி, மறைந்தது என்று தெரியவில்லை. வேலைக்காரர்கள் கண்ணீரும், கம்பலையுமாக நின்று கொண்டிருந்தனர்.

"உண்மையைச் சொல்லி விடுங்கள். தோலை உரித்து விடுவேன். போலீஸ் ஸ்டேஷனில் ஒப்படைத்து விடுவேன்!" — என்று கூச்சல்போட்டுக்கொண்டிருந்தார் ஜகதீசன். வாஸந்தி அழுது அமர்க்களப்படுத்திக் கொண்டிருந்தாள்.

திக்பிரமை பிடித்தாற்போல் நின்றுகொண்டிருந்தான் ராமகிருஷ்ணன். அந்தச் சமயம் பார்த்து வாஸந்தி கண் ஜாடை காட்டச் சமையற்காரச் சங்கரன் அவர்முன் வந்தான். "ஸார்! நான்

# ஐம்பது வருடத் தொண்டு

தமிழ் நாட்டில் அறிஞர், கவிஞர், எழுத்தாளர், தேசபக்தர் முதலியவர்கள் அவர்கள் வாழ்ந்த காலத்தில் வறுமையினால் வாடியதில்லை என்ற புதிய சரித்திர சகாப்தம் நம் காலத்தில் ஆரம்பமாகி யிருக்கிறது. இதை எண்ணித் தமிழர்களாகிய நாம் பெருமைப்பட வேண்டும்.

இத்துறையில் தமிழ் எழுத்தாளர் சங்கம் ஒரு சிறப்பான கைங்கரியத்தைச் செய்ய முன் வந்திருப்பது அறிந்து மிக்க மகிழ்ச்சி அடைகிறோம்.



திரு நெல்லையப்பர் சிறந்த தேசபக்தர், உத்தமத் தமிழ் அறிஞர்; நல்ல கவிஞர்; கவியரசர் பாரதியாரால் "தம்பி!" என்று உரிமையுடன் அழைத்துப் பாராட்டும் பெரும் பாக்கியம் பெற்றவர். அந்த நாளில் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கடுமையான சட்ட திட்டங்களை யெல்லாம் எதிர்த்துக் கவியரசரின் தேசிய கீதங்களைப் புத்தகமாக வெளியிட்டுத் தேசத் தொண்டாற்றிய சிலர். திரு வ. உ. சிதம்பரம் பிள்ளைக்கு உற்ற நண்பர். அவர் வெஞ்சிறையில் வாடிக் கொண்டிருந்த போது திரு நெல்லையப்பர் தலைமறைவாக இருந்து கொண்டு வ. உ. சி. யைச் சிறையில் பேட்டி காண்பார். அவர் இடும் கட்டளைகளை வெளியில் வந்து செயலாற்றித் தீரமுடன் நிறைவேற்றி வைப்பார். சுமார் முப்பது ஆண்டுகளுக்கு மேலாக "லோகோபகாரி" என்ற வாரப் பத்திரிகையின் ஆசிரியராக இருந்து மிகச் சிறந்த முறையில் தமிழுக்கும் தமிழ் நாட்டுக்கும் தொண்டாற்றியவர். திரு வ. வே. சு. ஐயர் ஆசிரியராக இருந்து நடத்திய "தேசபக்தன்" பத்திரிகையின் பிற்காலத்தில் அதன் ஆசிரிய பீடத்தில் அமர்ந்து அரும்பணியாற்றியவர். நம் பாரத நாட்டின் விடுதலை இயக்கத்தில் ஈடுபட்டுச் சிறை சென்ற தியாகி. சுமார் அரை நூற்றாண்டு காலம் பேச்செல்லாம் செயலாக, மூச்செல்லாம் பொதுநலமாகப் பயன் கருதாமல் தொண்டாற்றிய உத்தமர்.

இத்தகைய தமிழ் அறிஞர், கவிஞர், தேசபக்தர் இன்று வறுமைக்கும் முதுமைக்கும் இடையே சிக்குண்டு நிற்கிறார். வரையாது வழங்கிய வள்ளல்கள் வழி வந்த தமிழகம், விழிப்புக் கொண்டு முன்னேறும் வீரத் தமிழகம், நெல்லையப்பர் நிதிக்கு அள்ளிக் கொடுத்து உதவ வேண்டும்.

நெல்லையப்பர் நிதிக்கு நன்கொடை அனுப்ப வேண்டிய விலாசம்: திரு எஸ். ஏ. பி. அண்ணாமலை, "குமுதம்" காரியாலயம், புரசைவாக்கம் நெடுஞ்சாலை, சென்னை-10.

சொல்றேன்னு நீங்க தப்பா நெனைச்சுக்காதீர்கள்! இதோ இவர்மீது எனக்குத் துவேஷமில்லை; பகையில்லை. நான் இந்த வீட்டுக்குப் பொது வான ஆசாமி. வெளியே செல்லுவதற்கு முன் இவர் வாஸந்தி அம்மாளோட அறைப் பக்கம் போய்விட்டு வந்ததை நான் பார்த்தேன். அப் போது வாஸந்தி அம்மா முகம் அலம்பிக்கப் போயிருந்தாங்க. அதனாலே எதற்கும் ஒரு ஆசை, அவர் அறையையும் சோதனை போட் டுட்டா ......"—ராமகிருஷ்ணனை எல்லோருடைய விழிகளும் ஒரே சமயம் ஏறிட்டு நோக்கின.

ஜகதீசன் சமையற்காரச் சங்கரனை நோக்கிக் கையை ஓங்கினார். "முட்டாள்! யாரைப் பார்த்து உளறுகிறாய் தராதரம் தெரியாமல்!"— அவருடைய ஓங்கிய கை அவன்மீது விழாமல் ஓடிவந்து தடுத்தாள் வாஸந்தி. "ஏன் அப்பா! அவன் சொல்படி செய்து விட்டால் அவருக்கும் நிம்மதி. நமக்கும் நிம்மதி!" என்றாள். ராமகிருஷ்ண னுக்கு நெஞ்சு கொதித்துக் கொந்தளித்தது. அவனுக்கு விஷயம் விளங்கி விட்டது. கொடிய விஷப் பாம்பின் மீது அவன் கல்லை விட்டெறிந்து விட்டான். பழியைத் தீர்த்துக் கொள்ளச் சமயம் பார்த்துக் கொண்டிருந்த அந்தக் கருநாகம், தன் முழு விஷத்தையும் அவன் மீது கக்கித் தன் வர்மத்தைத் தீர்த்துக் கொண்டு விட்டது.

அவன் பார்வை ஒரு கணம் வாஸந்தியின் புறம் திரும்பியது. பிரேதம் போல் வெளிறியிருந்த அந்த முகத்தில் அச்சமயம் நிலவியிருந்த விஷமப் புன்னகை, அவள் முகத் தோற்றத்தைப் பின்னும் விகாரமாக்கியிருந்தது. தன் பூர்த்தி யாகாத மனோரதத்துக்கு, நிறைவேறாத காத லுக்குப் பழி வாங்கி விட்ட பெருமை அதில் தாண்டவமாடிக் கொண்டிருந்தது. ஆம்! அது அவள் வேலைதான். அவன் முகம் அலம்பிக் கொள்ளவோ, அல்லது வேறு வேலை ஏதாவது செய்யவோ கீழே சென்ற தருணம், அவன் அறை யில் அந்தச்சங்கிலியைச் சமையற்காரச் சங்கரனின் உதவியுடன் வைத்திருக்க வேண்டும். இப்போது அவனால் உண்மையை வெளியிட முடியுமா! என்னதான் அவனிடம் உயர்ந்த அபிப்பிராயம் வைத்திருப்பவராயினும், தன் பெண்ணுக்கு விரோதமாக அதை ஜகதீசன் நம்புவாரா! ஏற் கெனவே ஆத்திரத்தால் பொருமிக் கொண் டிருக்கும் வாஸந்தி, அவன்தான் தன்னிடம் காதலுக்காக யாசிக்கவும், தான் முடியாது என்று அவனிடம் மறுத்ததால்தான் அவன் சங்கிலியைத் திருடினான் என்று கூசாமல் பழியைச் சுமத்த அஞ்ச மாட்டாள். அங்ஙனே நம்புவதற்கும் அதுதானே பொருத்தமாகத் தோன்றும்! ஒரு பெண்ணிடம் முறை தவறி நடந்ததாகக் கூறும் குற்றத்தை ஏற்று, அதனால் அவன் பெயருக்குண் டாகும் இழுக்கை விட, திருட்டுக் குற்றத்தை ஏற்று அதன் மூலம் உண்டாகும் மாசு எத்த னையோ மேலானது. பிறந்தது முதல் அவன் ரத்தத்தில் ஊறி வந்துவிட்ட 'நேர்மை' அலறி யது. "ஒப்புக் கொள்! திருட்டுக் குற்றத்தை!" என்று. எப்படியோ அந்தப் பயங்கர நரகத்தி னின்று விடுதலை பெற ஓலமிட்ட அவன் உள்ளத் துக்கு ஒரு வழி கிடைத்து விட்டது. "வாருங்கள் ஸார்! சோதனை போடுங்கள்!" என்று இரண்டே எட்டில் தன் அறையை அடைந்தான் அவன். சங்கரன் அவன் அறையைச் சோதனை போட்டு, அவன் பெட்டியை ரொம்பவும் சுவாதீனமாகக் குடைந்து, அங்கிருந்து இரட்டைவடம் சங்கிலி யொன்றை வெளியே எடுத்தான்!

## ஐயோ! அப்படியா!


















டாக்டர்:—உமக்கு இவ்வளவு பெரிய வியாதி வந்திருக்கிறதே, உமக்கு என்ன சம்பளம் ?

நோயாளி :—45 ரூபாய்தான்.

டாக்டர் :—சும்மா புளுகாதிங்கோ. அந்தச் சம்பளத்துக்கு இந்த வியாதி வரவே வராது......

"ஆ! என் சந்தேகம் மெய்யாகி விட்டது. உண்ட வீட்டுக்கு இரண்டகம் செய்ய நினைத்தீர்களே! பேஷ்!" என்றாள் வாஸந்தி ஏகத்தாளமாக.

ஜகதீசன் திக்பிரமையடைந்து நின்றுவிட்டார். "ஸார்! என் அம்மாவுக்கு உடம்பு சரியில்லே பணம் வேண்டும் என்று ஊரிலிருந்து கடிதம் வந்தது. அதனால் சங்கிலியைத் திருடினேன். இதோ அதற்கும் பிராயச் சித்தம்!"—இரண்டு வரியில் தன் ராஜினாமாவை நீட்டினான் ராமகிருஷ்ணன்.

ஜகதீசன் உருட்டி உருட்டி விழித்தார். "உனக்கு ஆதரவு கொடுத்துக் கைதூக்கி விட்டதற்கு இதுதான் எனக்குக் கைம்மாறு, இல்லையா! தைரியமாகத் திருடினாய் என் சொத்தை. இப்போது அதைவிடத் தைரியமாக நீட்டுகிறாய் ராஜினாமாவை" என்று அவர் சொன்னபோது, பொங்கி எழுந்த துக்கத்தை மிகவும் சிரமப் பட்டு அடக்கிக் கொண்டான் ராமகிருஷ்ணன்.

"உலகத்தில் ஏழைகள் பணக்காரர்கள் என்ற பாகுபாட்டை விட, உத்தமர்கள், அதமர்கள் என்ற பாகுபாடுதான் முக்கியமானது. அதை அறியாமல் அதமர்கள் நிறைந்த இந்தப் படுகுழியில் காலை வைத்தது என் தவறு..." என்ற எண்ணத்துடன் மறு கணமே தன் அறையைக் காலி செய்து விட்டுத் தன் ஊரை நோக்கிப் புறப்பட்டான் ராமகிருஷ்ணன்.

** ** **

ராமகிருஷ்ணன் ஊர் சென்று சில நாட்களுக்குப் பிறகு. ஜகதீசனின் பங்களாவில் மாடி ஹாலில் அமர்ந்து உல்லாசமாகச் சம்பாஷித்துக் கொண்டிருந்தனர் வாஸந்தியும், அவள் தாய் மங்களமும்.

"ஆனாலும் அந்தப் பையன் ராமகிருஷ்ணன், இத்தனை அசடாக இருக்கும் என்று நான் கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை. அவ்வளவு பெரிய பழியைத் தன் தலையில் சுமுகமாக ஏற்றுக் கொண்டு, வேலையையும் ராஜினாமா செய்து விட்டுக் கிளம்பி விட்டதே! பைத்தியம்! உன்னைக் கல்யாணம் செய்துகொள்ள அது கொடுத்து வைக்கவில்லை. துரதிர்ஷ்டக் கட்டை! வலியவந்த ஸ்ரீதேவியைத் தூரத் தள்ளி விட்டுப் போய் விட்டானே! தலை எழுத்துக்கு நாம் என்ன செய்யலாம்!"

"ஆமாம்! இல்லா விட்டால் நான் அதைக் கெஞ்சியதற்குப் பிடி கொடுக்காமல் யாரோ ஏழை மாமா பெண்ணை நினைச்சு உருகுமா! அது தான், சரியானபடி பழி வாங்கிட்டேன், அது முகம் அலம்பிக்கக் கீழே போயிருக்கச்சே. சங்கரனின் உதவியாலே என் சங்கிலியை அதனுடைய அறையிலே கொண்டு வைச்சு ஒருவேளை அது உண்மையைச் சொல்லியிருந்தாலும், அது தான் என்னிடம் காதலுக்கு யாசித்ததாகச் சொல்லியிருக்க மாட்டேனா! அப்பா என்னுடைய வார்த்தையைத் தானே நம்புவார்!"—கேலியாகச் சிரித்தாள் வாஸந்தி.

அவ்வளவு நேரமும் மாடிப்படிகளில் நின்று அவர்களுடைய சம்பாஷணையை ஒன்று விடாமல் கேட்டுக் கொண்டிருந்த ஜகதீசனின் உள்ளம் ஒருமுறை கிடு கிடுத்தது. "ஆ!... என்ன காரியம் செய்து விட்டேன் ஆராய்ந்தறியாமல்! இப்போது போய் வாஸந்தியைக் கடுமையாகக் கண்டித்தால் என்ன! ......... கண்டித்து என்ன பிரயோஜனம்! அம்பலமாகிவிட்ட ராமகிருஷ்ணனின் பழியை என்னால் என் பெண்ணின்மேல் பகிரங்கமாகச் சுமத்தி வெளியிட முடியுமா!...... 'நிரபராதி ராமகிருஷ்ணனிடம் எனக்கு மன்னிப்பு கிடைக்குமா! நேர்மைக்கு அடிபணிந்து கடைசி வரை உண்மையை வெளியிடாமல், என் கண்ணியத்தையும், கௌரவத்தையும் காப்பாற்றிய அவனிடம் என் நன்றியை எப்படித் தெரிவிப்பேன்!......"—கடகட வென்று கீழே இறங்கிச் சென்று, சுவாமி படத்துக்கு எதிரில் நின்று கரம் குவித்த ஜகதீசனின் கண்களிலிருந்து மடை திறந்த வெள்ளம்போல் கண்ணீர் பெருகியது. நெஞ்சு உருகி இறைவனிடமும், தன் இருப்பிடத்தைக்கூட அறிவிக்காமல், எங்கோ பல மைல்கள் கடந்து தன் ஊரை நோக்கிச் சென்று விட்ட ராமகிருஷ்ணனிடமும் மானசீகமாக மனம் கசிந்து மன்னிப்புக் கோரினார் அவர். "ராமகிருஷ்ணா! என் பணத்தின் பெருமையும், மகிமையும் அற்பமானதுதான். என்னை விட்டுப் பல மைல்கள் கடந்து தொலைதூரம் சென்றிருப்பினும் உன்னை நினைத்து நினைத்து வாடி வருந்தச் செய்யும் உன் நேர்மைத் திறன்தான் மகத்தானது. நீயாக உன்னிடமுள்ள அந்த ஒப்பற்ற குணத்தை வெளிப்படுத்தாவிட்டாலும், நான் எப்படியோ அதை அறிந்துகொண்டு விட்டேன்! உனக்கு என் பெண்ணைக் கொடுத்து விவாகம் செய்விக்க வேண்டும் என்ற எண்ணம் எனக்கிருந்தது. நீ ஏழையாதலால் அவளுக்கு நீ ஏற்றவனல்ல என்று நான் சிறிது யோசித்தேன். ஆனால் இப்போது சொல்லுகிறேன், "உன் கரம் பற்ற அவள்தான் சிறிதும் அருகதையற்றவள்!" என்று துயரத்தால் துடித்துக் கொண்டிருந்த அவர் உதடுகள் முணுமுணுத்தன.

அழகி வீட்டில்
இருக்கும் பொழுதும்
அழகிய வாயிலையே
அணிகிறாள்.

பிரிண்ட் செய்த, சாயம்
ஏற்றிய, மெர்ஸிரைஸ்
செய்த

**கடாவ்**
**வாயில்**



சிறந்ததையே வாங்குங்கள் கடாவையே
வாங்குங்கள்

தி கடாவ் மகன்ஜி ஸ்பின்னிங் அண்டு வீவிங் கம்பெனி லிமிடெட், மில்: பைக்குல்லா, பம்பாய். ஆபீஸ்:
லக்ஷ்மி பில்டிங், பல்லார்ட் பியர், பம்பாய் 1. ஸோல் ஸெல்லிங் ஏஜண்ட்ஸ்: 216 நேதாஜி ஸுபாஷ் சந்திர போஸ் ரோட், மதராஸ் 1

SISTA'S-KMS-104-TAMIL




## 5. ஏழைமைதான் இருப்பிடமா?

விடியற்காலையில் வெகு சீக்கிரமாகவே கோகிலா எழுந்து விட்டாள். பல் விளக்கி முகங் கழுவிக் கொண்டு இனிமையான குரலில் பிரார்த்தனைக் கீதங்களைப் பாடியவாறே அவள் வீட்டு வேலைகளில் ஈடுபட்டாள். வாசலுக்கு நீர் தெளித்துச் சுழித்துப் பெருக்கிக் கோலமிட்டாள். பிறகு அறை, முற்றம் ஆகியவற்றைப் பெருக்கி மெழுகிச் சுத்தம் செய்து விட்டு அழகழகான கோலங்களால் அலங்கரித்தாள். அவள் போட்ட அந்த அழகிய கோலங்கள் அவளுடைய கைத்திறனுக்கு எடுத்துக் காட்டாக அமைந்தன.

கோகிலா எழுந்து விட்டு வேலைகளில் ஈடுபட்டிருப்பதைக் கண்ணுற்ற ராதா எழுந்து அவளுக்கு உதவி புரியலானாள். ஆகா! வீட்டு வேலைகளைச் செய்வதில்தான் எத்தனை நர்விக! எத்தனை பதவிக! சுத்தமும் சௌந்தர்யமும் உருவான இவள் எதற்காகத் தன் கைகளாலேயே வீட்டு வேலைகளைச் செய்ய வேண்டும்? அவள் அப்படி வேலை செய்வதைப் பார்க்க ராதாவின் மனத்தை என்னவோ செய்தது. 'நமக்கு ஏன் இந்த வீண் யோசனை?' என்று அவள் அந்த யோசனையைத் தன் மனத்திலிருந்து களைந்தெறிய எத்தனையோ முயற்சித்தாள். அவள் முயற்சி பலனளிக்கவில்லை. ஏனெனில் அந்த யோசனை அவளை விடவில்லை.

இன்றெல்லாம் பார்த்துக் கொண்டிருக்க வேண்டும் என்று தோன்றக்கூடிய அளவுக்கு அழகாக இருக்கும் இவள் இப்படி மாய்ந்து மாய்ந்து வேலை செய்கிறாளே, எதற்காக? இவள் வெறுமனே கைகட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தாலே அழகாயிருக்குமே! ஏகப்பட்ட வேலைக்கார வேலைக்காரிகளை வைத்துக் கொண்டு வேலை வாங்க வேண்டிய இவள் எதற்காக இப்படி வேலைகள் செய்து உயிரை விடவேண்டும்?

திரும்பத் திரும்ப இம்மாதிரி யோசனைகள் வாட்டவே, ராதாவினால் பேசாமல் இருக்க முடியவில்லை. கோகிலாவையே கேட்டுவிடுவதென்று மனத்தைத் தைரியப் படுத்திக் கொண்டாள். "ஏன், அம்மா! எல்லா வேலைகளையும் நீங்களே இப்படி உங்கள் கையால் செய்கிறீர்களே! வேலை செய்வதற்கு யாரையும் வைத்துக் கொள்ளவில்லையா, என்ன?" என்று கேட்டும் விட்டாள்.

"வீட்டில் நாங்கள் இருப்பது மூன்றே பேர்கள்தானே? வீட்டில் வேலைக்காரர்கள் வைத்துக் கொள்ளும் அளவுக்கு வெட்டி முறிக்கிற வேலை என்ன இருக்கிறது? அப்படியே வேலைக்காரர்கள் வைத்துக் கொண்டாலும் அவர்கள் நம்மைப்போல் நன்றாகவும் சுத்தமாகவும் வேலை செய்வார்களா, என்ன?" என்று கேட்டாள் கோகிலா.

"இருந்தாலும் பெரிய வீடுகளில் வேலைக்காரர்கள் வைத்துக் கொள்ளாமல் வேலை நடக்குமா, அம்மா?" என்றாள் ராதா.

இந்த நாட்களில்தான் பணக்காரர்களிடையேயும், படித்தவர்களிடையேயும் அவர்கள் பெண்களாயிருந்தாலும் சரி, ஆண்களாயிருந்தாலும் சரி, வேலைக்காரர்களை வைத்துக் கொள்ளாமல் தங்கள் வீட்டு வேலைகள் நடக்க முடியாதென்ற வறட்டு ஜம்பமும் வீண் நம்பிக்கையும் வேரூன்றிப் போயிருக்கின்றனவே! அந்தக் காரணம் தான் ராதாவை அப்படி அந்தக் கேள்வி கேட்குமாறு தூண்டியது.

"எங்களை ஒன்றும் அப்படிப் பெரியவர்கள் கூட்டத்தில் சேர்த்து விடாதே! என் வீட்டுக்காரர் இருக்கிறாரே, அவர் பிறருக்குக்காக கொடுத்து நம் சொந்த வேலையைச் செய்யச் சொல்வது மகா பாவம் என்று சொல்லும் கட்சியைச் சேர்ந்தவர். அதனால் தான்......" என்றாள் கோகிலா.

அதற்குள்ளாகப் பக்கத்து வீட்டிலிருந்து யாரோ பலமாகக் கூச்சலிடும் சப்தம் கேட்டது. கோகிலாவுக்கும் ராதாவுக்கும் அதைக் கேட்டதும் தூக்கிவாரிப் போட்டது. ஒன்றன்பின் ஒன்றாக மூன்று தடவை அந்தக் கூச்சல் சப்தம் வந்தது. இருவரும் அந்தப் பக்கம் தங்கள் கண்களைச் செலுத்தினர். பக்கத்து வீட்டில் ஜன்னலின் மூடியிருந்த வலைக் கதவுகளைக் கைகளால் பிடித்து ஆட்டியவாறு பயங்கரமே உருவான ஒரு ஆடவன் நின்று கொண்டிருந்தான். அசைத்த வேகத்தில் அவன் அந்தக் கதவுகளைப் பெயர்த்து எடுத்து அப்பால் வைத்து விட்டுத்தான் மறு காரியம் பார்ப்பானோ என்று தோன்றியது.



ராதா கோகிலா இருவரும் அவனையும் அவனுடைய அந்தச் செய்கையையும் கவனித்தனர். அவன் மறுபடியும் வீடே அதிரும் படியாக ஒரு பயங்கரக் கூச்சல் போட்டான். அதைக் கேட்ட அவர்களுக்கு மறுபடியும் ஒரு முறை தூக்கிவாரிப் போட்டது.

"இந்த வீட்டுச் சொந்தக்காரருக்குத் தமையனார் இவர். இவருக்குப் பைத்தியம் பிடித்து விட்டது. அதனால்தான் இவரை இப்படி அறையில் போட்டுப் பூட்டி வைத்திருக்கிறார்கள். ஆனால் இதற்கு முன்னால் எனக்குத் தெரிந்த வரையில் இவர் இப்படிக் கூச்ச விட்டதாகவோ, வேறு ஏதாவது உபத்திரவங்கள் செய்ததாகவோ தெரியவில்லை. இன்றுதான் நான் இவர் இப்படிச் செய்வதைப் பார்க்கிறேன்" என்று வலைக்கதவைப் பிடித்து உலுக்கும் ஆடவனை அடையாளம் கண்டு கொண்ட கோகிலா, ராதாவுக்கு எடுத்துக் கூறினாள்.

ஜகதீஷ் குடியிருந்த வீடும், கூச்சலிட்டுக் கலவரம் செய்து கொண்டிருந்த ஆடவனுடைய வீடும் ஒன்றையொன்று ஒட்டினாற் போலவே இருந்தன. இரண்டு வீடுகளும் ஒருவருக்கே சொந்தமானவை யாகையால் ஒரு வீட்டிலிருந்து இன்னொரு வீட்டுக்குப் போய் வருவதற்கு வழியும் இருந்தது. ஜகதீஷுக்கு வீட்டை வாடகைக்கு விட்டு விட்ட பின்னர் அந்த வழியை அடைத்துப் போக்கு வரத்தைக் குறைத்துக் கொண்டிருந்தார்கள். ஜகதீஷ் குடியிருக்கும் வீட்டில் ஏதாவது பழுது பார்க்க வேண்டியிருந்தால் மட்டும் வீட்டுக்குச் சொந்தக்காரர் அந்த வழியைத் திறந்து கொண்டு வந்து போவது உண்டு. இல்லாவிட்டால் அவருடைய மனைவி தனக்குப் பொழுது இருக்கும் போதெல்லாம் கோகிலாவுடன் பேசிப் பொழுதைப் போக்கலாம் என்று எண்ணி அந்த வழியே வந்து போவாள். மற்ற வேளைகளில் எல்லாம் அந்த வழி மூடியே தான் இருக்கும்.

பைத்தியக்கார மனிதன் அப்படிக் கூச்சலிடவே, வீட்டிலிருந்த வேலைக்காரர்கள் அவனிடம் ஓடி வந்தார்கள். அவன் ஜன்னல் கதவைப் பிடுங்க முயற்சிப்பதைக் கண்டதும் சிலர் தம் பலம் கொண்ட மட்டும் அவனை இறுகக் கட்டிப் பிடித்துக் கொண்டார்கள். வந்த வேலைக்காரர்கள் அவனுடைய சொந்த வேலைக்காரர்கள் அல்ல. அதனால் அவர்களுக்கு அவனைக் கண்காணித்துப் பாதுகாக்கும் பழக்கமும் ஏற்படவில்லை. பைத்தியக்காரனிடம் பழகி அவன் படும் வேதனையை அநுபவித்திருந்தால் அல்லவா அவர்களுக்கு அவனிடம் அநுதாபம் ஏற்படுவதற்கு? அவன் யாரோ? அவர்கள் யாரோ? அவனிடம் அநுதாபம் கொள்வதற்கு அவர்களுக்கு என்ன வந்து விட்டது? அவர்கள் அவனிடம் அநுதாபம் கொள்ளாமல் இருப்பது தான் இயல்பே ஒழிய அநுதாபம் கொள்வது இயல்பு அல்லவே? அதனால் அவர்களில் இரண்டொருவர் பைத்தியக்காரனை இன்னும் பைத்தியமாக்கி வேடிக்கை பார்ப்பதில் முனைந்தனர். இந்த உலகத்தில் யாருக்குமே பிறரைச் சீண்டி தட்டி விட்டு வேடிக்கை பார்ப்பதில் ஆனந்தம் ஏற்படுவது சகஜம் தானே? இவ் விஷயத்தில் வேலைக்காரர்களை மட்டும் எப்படிப் பிரித்துக் கூற முடியும்?

"ஏன், அப்பா! இப்ப ஐயா என்ன சொல்கிறார்? மூளை ஒரு நிலைக்கு வந்து விட்டதாமா?" என்று கேட்டான் ஒருவன்.

"நன்றி கெட்ட நாயே! என்னையா கேட்கிறாய்?" என்று அந்தப் பைத்தியக்காரன் உரக்கக் கூப்பாடு போட்டான்.

"ஆமாம், வேறு யாரிடம் கேட்பார்கள்? மூளை சரியில்லாதவர்களிடம் தான் இப்படிக் கேட்பார்கள்! இது தெரியவில்லையா? மூளை சரியாயிருந்தால் தானே தெரியும்?"

"உனக்கு மூளை சரியில்லாமல் இருக்கும். உன் அப்பனுக்கு மூளை சரியில்லாமல் இருக்கும். உன் பாட்டனுக்கு மூளை சரியில்லாமல் இருக்கும். காவாலிப் பயலே! எவனடா நீ என்னை மூளை சரியில்லாதவன் என்று சொல்வதற்கு? இன்றைக்கே உன்னை வீட்டுக்கு அனுப்பி விடுவேன். என்னை யார் என்று எண்ணினாய்? ஜாக்கிரதை! போடா, என் முன் நில்லாதேடா!" என்று இரைந்தான் அந்தப் பைத்தியக்காரன்.

பைத்தியக்காரன் தன்னைப் பைத்தியக்காரன் என்று எங்கேயாவது சொல்லிக் கொள்ளுவானா? சொல்லிக் கொள்வது ஒரு புறம் இருக்கட்டும். தான் பைத்தியக்காரன் தான் என்பதையாவது அறிவானா? இந்த விஷயத்தில் முட்டாளும் பைத்தியக்காரனும் ஒரே மாதிரியானவர்கள். ஒருவனுக்கொருவன் சளைத்தவன் அல்ல. இருவருக்கும் உள்ள ஒரே ஒரு வித்தியாசம் என்னவென்றால் முட்டாள் என்பவன் இயல்பிலேயே முட்டாளாயிருப்பான். தன்னைப் பார்க்கும் பிறரும் தன்னை முட்டாள் என்று சொல்லும்படி நடந்து கொள்வதில் அவன் கைதேர்ந்தவனாயிருப்பான். ஆனால் முட்டாளை முட்டாள் என்று சொல்லி விட்டால் முட்டாளுக்குக் கன கோபம் வந்து விடும். பைத்தியங்கள் அவ்விதம் இல்லை. பின்னால் ஏதோ காரண வசமாகப் பைத்தியமாகி இருக்கும். தன்னைப் பார்த்து ஒருவன் பித்தன் என்று சொன்னால் சில பைத்தியங்களுக்குக் கோபமே வருவதில்லை. அவ்வளவு தூரம் அவர்களுக்குப் பைத்தியம் முற்றி விட்டதா, அல்லது குறைந்து விட்டதா என்று சட்டென்று சொல்லி விட முடியாது. முட்டாள்கள் செய்யும் காரியத்தையும் பைத்தியங்கள் செய்யும் காரியத்தையும் தனித்திருந்து கவனித்துப் பார்த்தால், இருவரும் ஒருவருக்கொருவர் வெகு தொலைவில் இல்லை என்பது தெரிய வரும்.




"பஸ்ஸுக்கு இப்படித் தபஸ் பண்ணிக் கொண்டு உட்கார்ந்திருக்கிறீரே! பஸ் வருவதற்கு முன்னால் பகவானே வந்து விடுவார் போலிருக்கிறதே!"

"அதுதான் இல்லை, அவரையும் காணோம். அவரும் அந்தப் பஸ்ஸில்தான் வருகிறார் போலிருக்கிறது!"

இத்தனை பூர்வ பீடிகையும் வேலைக்காரர்களையும் முட்டாள்களாக்குவதற்காகப் போடப்படுகிறதோ என்று யாராவது கருதினால் அதற்கு யாரும் எக்காளும் பொறுப்பாளியாக மாட்டார்கள். பைத்தியக்காரனின் அந்த அதட்டல்களுக்கும் பயமுறுத்தல்களுக்கும் வேலைக்காரர்கள் சிறிதாவது மசிந்தால்தானே? அவ்வளவையும் துடைத்தெறிந்துவிட்டுத் தங்கள் போக்கில் அவர்கள் காரியம் செய்து கொண்டிருந்தார்கள்.

அதட்டலுக்கும் பயமுறுத்தலுக்கும் செத்தாலும் அடிபணியக் கூடாது என்ற எண்ணம் எவருக்காவது இந்த உலகத்தில் இருக்குமானால் அது வேலைக்காரர்களுக்குத் தான் என்பதை யாரும் எளிதில் சிறிதும் யோசனையின்றிக் கூறி விடலாம்.

"என்னை அனுப்பி விடுவாயோ? அதைத் தான் பார்த்து விடுவோமே! அதற்குள் ஐயா ஆஸ்பத்திரிக்குப் போய்ச் சேர்ந்து விடுவார்! நான் சொல்வது நினைவிலிருக்கட்டும்!" என்றான் அந்த வேலைக்காரன்.

உண்மைதானே? அவன் சொன்னதில் என்ன தவறு? வேலைக்காரன் நினைத்தால் செய்ய முடியாத காரியம் ஒன்று உண்டா? அவன் நினைத்தால் ஐயாவை ஆஸ்பத்திரிக்கும் அனுப்பலாம், அதற்கு மேலும் அனுப்பலாமே! அவனைத் தடுக்க யாரால் ஆகும்?

இரவு வெகுநேரம் வரை கண் விழித்திருந்ததனால் ஜகதீஷுக்கு இயல்பாகவே நல்ல தூக்கம் வந்து விட்டது. விடியற்காலைத் தூக்கம் என்றாலே தனி ஜோர்தான். அதுவும் அன்றைக்குக் கேட்க வேண்டுமா? ஆனால் அந்தக் கூச்சலையும் கூப்பாட்டையும் கேட்டு அவன் தூக்கம் கலைந்து விழித்துக் கொண்டு விட்டான்.

"கோகிலா! இன்று தேநீர் போட்டுத் தரமாட்டாயா?" என்று கேட்டுக்கொண்டே ஜகதீஷ் படுக்கையில் எழுந்து உட்கார்ந்தான். வருஷக் கணக்காக விட்டுப் போன பழக்கம் அன்று என்னவோ திடுதிப்பென்று அவனுக்கு நினைவு வந்தது. அதோடு அப்பொழுதுதான் தூங்கி விழித்த அவன் முகத்தில் அன்று என்னவோ ஒரு விசித்திரமான தீர்மானமும் உருவாகியிருந்தது.

"பேஷாகத் தருகிறேன். நானும் அதையே தான் யோசித்துக் கொண்டிருந்தேன்!" என்றாள் கோகிலா. அத்தனை நாளும் இல்லாத




## போட்டோ தொழிலில் 60 வருஷ சிறந்த சேவை






### கேவாபான் 33

பகல் வெளிச்சத்திற்கும் செயற்கை வெளிச்சத்திற்கும் சிறந்தது இந்த மின்னல் வேக பாங்ரோமாடிக் பிலிம்.

### கேவாகுரோம் 30

பகல் வெளிச்சத்திற்கு மிக உகந்தது இந்த ஆர்தோகுரோமாடிக் பிலிம்.

இலவச விவரங்களுக்கும் "கேவார்ட்" எக்ஸ்போஷர் கால்குலேட்டருக்கும் கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும் :

**Allied Photographics Limited**

**அல்லீட் போட்டோகிராபிக்ஸ் லிமிடெட்**

(மெயிலிங் டிபார்ட்மெண்ட்) கஸ்தூர் பில்டிங்ஸ், ஜாம்ஷெட்ஜி டாடா ரோடு, பம்பாய்-1

கிளை ஆபீஸ்கள் : பம்பாய் - கல்கத்தா - மதராஸ் - புது டில்லி

பழக்கம் திடுதிப்பென்று உங்களுக்கு உண்டாவானேன் என்று கணவனைக் குடைந்து கேள்விக்கு மேல் கேள்வி கேட்டுக் கஷ்டப்படுத்த வேண்டும் என்ற எண்ணம் அன்று ஏனோ கோகிலாவுக்கு உண்டாகவில்லை. ஜகதீஷைப் பிடித்த நல்ல காலம் என்று சொல்வதா? இல்லை...

தேநீர் தயாரித்து ஜகதீஷுக்குக் கொடுத்தபின் கோகிலா சமையலுக்கு வேண்டியதைக் கவனிப்பதில் மூழ்கினாள். அதற்குள் அவளுடைய பிள்ளை பீயூஷ் விழித்தெழுந்து விட்டான். அழகும் ஆரோக்கியமும் அமையப் பெற்ற அந்தப் பாலகன் எழுந்திருக்கும்பொழுதே 'கலகல' வென்று சிரித்தவாறு இன்முகத்துடன்தான் எழுந்தான். திடகாத்திரமுள்ள குழந்தைகள் என்றால் எப்பொழுதும் மகிழ்ச்சியே உருவாக இருப்பது இயல்புதானே? நோஞ்சல் குழந்தையா, 'ஙொய், ஙொய்' என்று அழுது தீர்ப்பதற்கு?



சிரித்த முகத்துடன் எழுந்த பீயூஷ் வீட்டில் இரண்டு புதிய மனிதர்களைக் கண்டதும் சற்றுத் தயங்கினான்; சங்கோசப் பட்டான். ஆனால் ஒரு குழந்தைக்கு இன்னொரு குழந்தையைக் கண்டுவிட்டால் அலாதி ஆனந்தமும் கவர்ச்சியும் ஏற்படுவது இயல்புதானே? சிறிது நேரத்துக்கெல்லாம் அந்தச் சங்கோசம் அவனை விட்டு விலகியது. ராதாவும் அன்போடு பீயூஷைத் தன் அருகில் அழைத்தாள். ராதாவின் பிள்ளை அமரனும் அந்தச் சின்னஞ் சிறு வீட்டில், சின்னஞ் சிறு பாலகன் ஒருவன் தன்னோடு விளையாடுவதற்கு இருக்கிறான் என்பதைக் கண்டதும் குதூகலமடைந்தான். சிறிது நேரத்துக்கெல்லாம் கண்களுக்கெதிரிலேயே அமரனும் பீயூஷும் இணைபிரியா நண்பர்கள் போல் பழகி விளையாடத் தொடங்கி விட்டனர். அதைப் பார்த்த ராதாவுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு ஓர் எல்லையில்லை.

ஜகதீஷினால் கவலையற்று உட்கார்ந்திருக்க முடியவில்லை. சிறிது நேரம் புஸ்தகத்தை எடுத்து வைத்துக்கொண்டு படிக்க முயன்றான். படிப்பில் மனம் செல்லவில்லை. எனவே, எழுந்து இங்கும் அங்கும் நடைபயின்றான். மாடிக்கும் கீழுக்குமாக ஏறி இறங்கினான். அவன் என்ன செய்தும் சிந்தனை அவனை விடவில்லை. ஆயினும் அவ்வளவு சிந்தனைக்கும் இடையே கூட அவன் கண் கோகிலாவின் மீதே பதிந்திருந்தது.

சிறிது நேரத்துக்கெல்லாம் கோகிலா கையில் ஒரு பெரிய தட்டை எடுத்துக்கொண்டு துளசிபூஜை செய்வதற்காக மாடிக்குப் போனாள். ஜகதீஷும் பேசாமல் அவள் பின்னாலேயே சென்றான். ஆனால் அங்கே போய்ப் பார்த்தால் கோகிலாவைக் காணோம். 'இப்பொழுது தானே மாடியேறி வந்தாள். நாமும் அவளுக்குப் பின்னாலேயே தானே வந்து கொண்டிருக்கிறோம்? அதற்குள் அவள் எங்கே போய் விட்டாள்?' என்று எண்ணிய ஜகதீஷுக்கு ஆச்சரியமாக இருந்தது. ஒருவேளை பின்புறத்து வழியாகக் கீழே இறங்கிப் போயிருப்பாளோ என்ற எண்ணம் எழவே, கீழே இறங்கிச் சென்று மறுபடியும் ஒருமுறை தன்னுடைய சிறிய வீட்டைச் சுற்றிப் பார்த்தான். ஆனால் கோகிலாவைக் காணவில்லை. 'அட! இது என்னடா வேடிக்கை இது? கோகிலா எங்கே மாயமாய் மறைந்தாள்? நம் கண்களே நம்மை ஏமாற்றி விட்டனவா? அல்லது மனத்தில் சிந்தனையை ஓட விட்டுக் கொண்டிருக்கும் நாம்தான் அவளைக் கவனியாமல் வந்து விட்டோமா?' என்று எண்ணிய ஜகதீஷ் மறுபடியும் மாடியேறி வந்தான். அவன் வருவதற்கும் கோகிலா பக்கத்து வீட்டுக்குப் போய் வரும் வழியாக அவர்கள் வீட்டிலிருந்து வேகமாகத் திரும்பி வருவதற்கும் சரியாக இருந்தது. அவளையும் அந்த வழியையும் பார்த்த ஜகதீஷின் கண்கள் அவனையறியாமல் ஆகாயத்தை அண்ணாந்து பார்த்தன. அந்த வழிக்கு நேர் உயரே, மொட்டை மாடியின் கைப்பிடிச் சுவரைப் பிடித்துக் கொண்டு தலையை வெளியில் நீட்டி ஒருவன் கோகிலாவையே குனிந்து பார்த்துக் கொண்டிருந்தான். அவன் நல்ல கண்கொண்டு பார்க்கவில்லை, கெட்ட கண்கொண்டு பார்க்கிறான் என்பதை அவன் கண்களே பறைசாற்றிக் கொண்டிருந்தன. அவனை அண்ணாந்து பார்த்த ஜகதீஷ் சட்டென்று கண்களைத் தாழ்த்தி அந்த வழியையும் கோகிலாவையும் மீண்டும் ஒரு முறை பார்த்தான்.

கோகிலாவின் கையில் உள்ள தட்டு முந்தானையினால் மூடியிருந்தது. அவள் முகத்தில் பயக்குறி தாண்டவமாடிக் கொண்டிருந்தது. ஜகதீஷ் தன்னெதிரே இப்படி திடுதிப்பென்று வந்து நிற்பான் என்று அவள்

கனவிலும் கற்பனை செய்துகூட பார்க்கவில்லை. ஆகவே, அவன் கலவரமுற்று ஒருமுறை பின்புறம் திரும்பிப் பார்த்தான். பக்கத்து வீட்டுக்காரன் கண் இமைக்காமல் கோகிலாவை விழுங்கி விடுவதுபோலப் பார்த்துக் கொண்டிருந்தான். பக்கத்து வீட்டுக்காரனுக்குள்ள உரிமையை அவன் விட்டுக் கொடுத்து விட முடியுமா? விட்டுக் கொடுக்க முடியும் என்றாலும் அவன் ஏன் விட்டுக் கொடுக்க வேண்டும்? அந்த உரிமையின் பலனை அவன் ஏன் அநுபவிக்கக் கூடாது? அந்தத் தோரணையில் பார்ப்பது போலிருந்தது அவன் பார்த்த அந்தப் பார்வை. இரண்டு பக்கங்களிலிருந்தும் இரண்டு ஆடவர்கள் தங்கள் கூரியவிழிக் கணைகளால் தன்னைத் துளைத்துவிடுவதுபோல் பார்க்கவே, கோகிலா கதிகலங்கிப் போய்க் கையிலிருந்த தட்டைச் சட்டென்று கீழே வைத்தான். தட்டைக் கீழே வைத்ததும் அதிலிருந்து ஏழெட்டு ரூபாய்கள் கணகணவென்று சப்தித்துக்கொண்டு கீழே விழுந்து உருண்டோடின. ஜகதீஷ் அந்த ரூபாய்கள், தட்டு, கோகிலா, பக்கத்து வீட்டு ஆடவன் எல்லோரையும் ஒரே பார்வையில் ஒருமுறை பார்த்தான். பிறகு வேகமாகப் பின்னால் திரும்பி நடந்தான்.

இத்தனை நேரமும் அந்த ஆடவனின் கண்கள் கோகிலாவின் மீது மட்டுமேதான் பதிந்திருந்தன. மூன்றாமவர் இருக்கக் கூடும் என்ற எண்ணமே அவன் கண்களுக்கு எழவில்லை. கோகிலா தட்டைக் கீழே வைத்ததையும் ரூபாய்கள் உருண்டோடியதையும் கண்டபிறகுதான் அவன் நினைவு அவனுக்கு வந்தது. கோகிலாவின் மீது புதைத்திருந்த கண்கள் ஜகதீஷைக் கவனித்தன. அவன் நிலைமை தென்னை மரத்தில் ஏறித் தேங்காய் திருடப் போனவன் கதையாகி விட்டது.

எனவே, அவன் தன்னை ஒருவாறு சமாளித்துக் கொள்ள வேண்டித் தன் வீட்டுக்குள் திரும்பிப் போய்க் கொண்டிருந்த ஜகதீஷைக் கூப்பிட்டு, "என் மிஸ்டர், ஜகதீஷ்! இன்று நீங்கள் வீட்டில்தான் இருக்கிறீர்களா? காரியாலயத்துக்குப் போகவில்லையா?" என்று கேட்டான்.

அவன்தான் ஜகதீஷ் குடியிருந்த வீட்டுக்குச் சொந்தக்காரன். வீட்டுக்குச் சொந்தக்காரன் கேட்கும் வாடகையைக் கோணாமல் கொடுத்து விட்டுக் குடியிருந்த பொழுதிலும், அவனை அலட்சியப் படுத்தி விட்டு இந்தக் காலத்தில் குடிக் கூலிக்கு இருப்பவன் வீட்டுக்குள் போய்விட முடியுமா? வேண்டிய வாடகையை வாங்கிக் கொண்டு வீணில் பூட்டிக் கிடந்த வீட்டை வாடகைக்குக் கொடுத்தாலும் குடியிருப்பவரிடம் அபாரக் கருணை காட்டி விட்டதாகத்



தானே வீட்டுக்குச் சொந்தக்காரர்கள் எண்ணி இறுமாப்புக் கொள்கிறார்கள்? அவர்கள் ஏன் இறுமாப்புக் கொள்ள மாட்டார்கள்? குடிக்கூலிக்கு இருப்பவன் குட்டி போட்ட பூனையாக அடிக்கொரு தடவை குடிசையைத் தூக்குவதா என்று பொறுத்துப் போகும் வரை அவர்கள் அப்படித்தான் இருப்பார்கள்! குடியிருப்பவனுக்கு மட்டும் என்ன? பழைய வீட்டை விட்டுப் புதிய வீட்டுக்குப் போனால் பெரிய வசதி கிடைத்துவிடப் போகிறதா? எங்கு போனாலும் அதே அவதிதானே? அந்த அவதியை எங்கே பட்டால் என்ன?

ஜகதீஷுக்கு அந்தச் சமயம் அவனுடன் பேச வேண்டும் என்ற இச்சையே எழவில்லை. இருந்தாலும் வேண்டா வெறுப்பாகப் பின்னால் திரும்பி அவனைப் பார்த்து, "ஆமாம். இன்று வீட்டில்தான் இருக்கிறேன்!" என்றான்.

அவர்கள் பேசுவதைத் தனக்குச் சாதகமான சந்தர்ப்பமாகப் பயன்படுத்திக் கொண்டு கோகிலா தட்டையும் பணத்தையும் எடுத்துக் கொண்டு வீட்டுக்குள்ளே வெகு வேகமாகச் சென்று விட்டாள்.

"லீவில் இருக்கிறீர்களா, என்ன?"

பேச்சை வளர்த்தும் நோக்கத்தில் வீட்டுக்குச் சொந்தக்காரன் கேட்டான்.

"இல்லை. இன்றிலிருந்து வேலையையே விட்டு விட்டேன்!" என்று சொன்ன ஜகதீஷ் திரும்பி வீட்டுக்குள் போகத் தொடங்கினான்.

"விட்டு விட்டீர்களா? ஏன்?" என்று ஆச்சரியத்துடன் கேட்டவன் ஜகதீஷின் பதிலுக்குக் கூடக் காத்திருக்கவில்லை. "இன்று உங்களுக்கு அவகாசம் இருக்குமானால் என்னை வந்து பாருங்கள். உங்களிடம் எனக்கு ஒரு காரியம் இருக்கிறது!" என்றான். அதைச் சொன்ன பின் அவன் மொட்டை மாடியில் நிற்கவில்லை. விடுவிடுவென்று கீழே இறங்கிப் போய் விட்டான்.

"ஏழைமைதான் எல்லாக் குற்றங்களுக்கும் இருப்பிடமா?" என்ற கேள்வி ஜகதீஷின் மனத்தில் முளைத்தது. அந்தக் கேள்வி முளைத்ததுதான் தாமதம்; அவன் மனக்கண் முன்னே ராதா காட்சியளித்தாள். அதைத் தொடர்ந்தாற் போல் முதல் நாள் இரவு அவளைத் தெருவில் கண்ட கோலம் நினைவு வந்தது. அப்பொழுது அங்கே கூடியிருந்த மக்கள் அவளிடம் மிருகப் பிராயமாக நடந்து கொண்ட விதமும் நினைவு வந்தது. அடுத்த கணம் அவன் உள்ளத்தில் பகீரென்று ஏதோ தைத்தது.

அவன் கீழே இறங்கி நடந்தவாறே மேலும் யோசனை செய்யலானான். "கோகிலாவைப் போன்ற நற்குணங்கள் எவர்களிடமாவது இல்லாமலிருந்தால் ஏழைமையில் அவர்கள் கதி என்ன ஆகும்?" என்ற இன்னொரு கேள்வி முதல் கேள்விக்குப் பதிலாக அமைந்தது. அது ஜகதீஷை ஒரு நீண்ட பெருமூச்சு விடச் செய்தது. (தொடரும்)

# ஒண்ணு, ரெண்டா?

**தே. வீரராகவன்**

1. ஒண்ணு ரெண்டா என்ற கேள்வி
ஊரை யெல்லாம் கலக்குது;
என்ன ஆகும் இப்படிப் போனால்
என்ற ஏக்கம் பலக்குது.

2. பள்ளிச் சிறுவன் பையில் கையில்
போட்டிக் கூப்பன் கணக்குது;
புள்ளி கூட்டும் கணக்கப் பிள்ளை
போட்டுப் பார்க்கும் கணக்கிது.

3. ஓடும் ரெயிலின் உள்ளே போனால்
ஒண்ணு ரெண்டா கேட்குது;
ஆடும் சினிமா பார்க்கச் சென்றால்
அங்கும் அதுவே தாக்குது.

4. பீடி சுற்றும் கடைக்குள் சென்றால்
பேச்சு அதுதான் வேறில்லை;
கூடி நால்வர் நிற்கும் இடத்தும்
கூப்பன் தவிரப் பேச்சில்லை.

5. ஹோட்ட லுக்குள் சென்றால் 'சேர்வர்'
ஒண்ணு ரெண்டா கேட்கிறார்;
வீட்டி னுக்குள் நுழையுமுன் அவனும்
விடைகள் கேட்டுத் தாக்கிறான்.

6. கோயிலுக்குப் போன லங்கும்
குறுக் கெழுத்துப் போட்டிதான்;
நோயிக் காரன் படுக்கை பக்கம்
நோக்கின் அதுவே பேட்டிதான்.

7. மோட்டார் டிரைவர், வாட்ச மேனும்,
போர்ட்டர், கிளார்க்கு, வாத்தியார்;
போட்டோ கிராபர் யாரையும் வலையுள்
போட்டுக் கூப்பன் மாட்டுது.

8. இறைவன் போல ஒண்ணு ரெண்டா
இல்லா இடமே இல்லையே;
வரையப் போனால் இதன்தன் கதையை
வார்த்தை போதாத் தொல்லையே.



அவர்களை ஒரு "ஹெர்க்குலிஸ்-இந்தியா" சைக்கிளில் சென்று பாருங்கள்!

சிநேகிதர்களைப் பார்த்து வரவோ, அல்லது உற்றார் உறவினர் வீட்டிற்குச் சென்று வரவோ, வசதியாக ஒரு "ஹெர்க்குலிஸ்-இந்தியா" சைக்கிள் தயாராய் வைத்திருப்பது எவ்வளவு சௌகரியமாய் இருக்கிறது. உறுதியான வேலைப்பாடும் கச்சிதமான அமைப்பும் வாய்ந்த "ஹெர்க்குலிஸ்-இந்தியா" சைக்கிள் உங்களுக்குப் பல வருஷங்களுக்குச் சிறந்ததொரு போக்குவரத்து சாதனமாய் விளங்குகிறது.

சொந்தமாகவே உங்களுக்கு ஒரு சவாரிவண்டி வைத்துக் கொள்ளுங்கள்.





ஒரு

# ஹெர்க்குலிஸ்-இந்தியா

வாங்குங்கள்.

இந்தியாவில் தயாரிப்பாளர்கள்:

டி ஐ. சைக்கிள்ஸ் ஆப் இந்தியா லிமிடெட்., மதராஸ்.

எல்லா வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

பவுண்டன் பேனா, இங்க் உலகில்
புராதனப்பெருமை வாய்ந்த பெயர்

# வாட்டர்மன்ஸ்

(ஸ்தாபிதம்: 1884)

இந்தியாவில் இப்பொழுது தாராளமாக
கிடைக்கிறது



வாட்டர்மன்ஸ்
இங்க்



சில்லறை விலை
2 அவுன்ஸ் பாட்டில்
அணா 12.

லைட்விட்ஸ் (ஓரியண்ட்) லிமிடெட், மதராஸ்-1

டி. டி. கிருஷ்ணமாச்சாரி & கம்பெனி
மதராஸ் பம்பாய் கல்கத்தா டில்லி

---

# நல்லாடை அணிந்த ஆண்கள் அனைவரும்




பளபளப்பான
பாதரக்ஷைகளை
அணிகிறார்கள்

# கீவி
பூட் பாலீஷ்

# அன்புச் சரம்




படை படைக்கும் வெய்யில்; கதிரவனின் சுடு கதிர்கள் அனலை வாரி இறைத்துக் கொண்டிருந்தன. அத்துடன் ஒரே புழுக்கம். தப்பித் தவறி இலைகள் அசைந்து காற்று அடித்தாலோ, அதுவும் நெருப்பின் வெடிப்புடன் தான் வீசியது. இந்த அகர வேளையில் யார் கடைக்குச் சாமான் வாங்க வருவார்கள்!

கடையிலுள்ள மற்ற வேலைக்காரர்களும் பகல் சாப்பாட்டுக்குச் சென்றிருந்தார்கள். "பஞ்சு நவநாகரிகக் கடை" சொந்தக்காரனான பஞ்சு என்கிற பஞ்சநதம் மட்டும் தானே முதலாளியும் தொழிலாளியாகவும் கடையிலே தனித்து உட்கார்ந்திருந்தான். அவனுடைய கண்கள், எதிரே உருகி ஓடும் தார் ரோட்டை உறுத்து நோக்கிய வண்ணமிருந்தன.

திடீரென்று, "மாமா!" என்ற இனிய மழலைக் குரலைக் கேட்டதும், பார்வையைப் பக்கவாட்டில் திருப்பினான் பஞ்சநதம். தெரு ஓரமாக இருந்த வீடுகளின் ஆளோடி நிழலிலேயே நடந்து வந்து அவனுடைய கடைக்குள் அடியெடுத்து வைத்த ஒரு இளஞ் சிறுமி பஞ்சுவின் முன்னே நின்றாள். அவளுடைய பிஞ்சு முகம் கடைக்காரரைப் பார்த்ததும் இலேசாக முறுவலித்தது. அந்தச் சிறுமிக்கு வயசு ஐந்திருக்கும்.

"என்னம்மா குழந்தை! மிட்டாய் வேணுமா? அது இந்தக் கடையிலே கிடையாதே!" என்றான் பஞ்சு கனிவான குரலில். குழந்தை கடை தவறி வந்து விட்டாளோ என்ற சந்தேகம் அவனுக்கு.

"இல்லே, மாமா!" என்று அவன் பக்கம் திரும்பாமலேயே மொழிந்த அச் சிறுமியின் பார்வை அதற்குள் எதிரே கண்ணாடி பீரோவுக்குள் தெரிந்த சாமான்களின் மேல் லயித்துப் போயிருந்தது. அங்கே பவழ மாலைகள், முத்து மாலைகள், ரிப்பன், ஸ்னோ, பவுடர் வகையறாக்கள் முதலிய அரம்பையரின் அழகுச் சாதனங்கள் அழகாக வைக்கப் பட்டிருந்தன.

"பின்னே என்ன வேண்டும் உனக்கு! ரிப்பனா?" என்று கேட்டான் பஞ்சு.

"இல்லே மாமா, இல்லே! இந்த வெள்ளை முத்து மாலையை எடுங்கோ; நான் பார்க்க வேண்டும்!" என்றாள் குழந்தை. அவளுடைய பிஞ்சு ஆள் காட்டி விரல் கண்ணாடிப் பெட்டிக்குள்ளே ஒத்தையாகத் தொங்கிய முத்து ஹாரம் ஒன்றைச் சுட்டிக் காட்டியது.

உடனே பஞ்சுவுக்கு ஏனோ நெஞ்சு 'திக்' கென்று அடித்துக் கொண்டது. தவறிப் போய் விற்பனைப் பொருள்களுடன் சேர்த்து வைக்கப் பட்டு விட்ட இந்த மாலையை அவன் எப்படி விற்க விரும்புவான்! தவிர, அவனுடைய அருமைக் கல்யாணிக்கும், அவனுக்குமிடையே தற்போது ஒரே பிணைப்பாக இருக்கும் இந்த அன்புச் சரத்தை இழக்க அவன் மனசு துணியுமா!

## 2

இருபது வருஷங்களுக்கு முன்பு நடந்த நாடகம் அது!

அப்போது பஞ்சநதம் திருச்சி தேசியக்கல்லூரியில் பி. ஏ. வகுப்பில் படித்துக் கொண்டிருந்தான். ஹாஸ்டலில்தான் வாசம். சிறு வயசிலேயே தகப்பனாரை இழந்து விட்டிருந்த பஞ்சுவுக்கு மன்னார்குடியிலிருந்த அவன் பெரியப்பாதான் சகலமும். சுவீகாரப் புத்திரனைப்போல் பஞ்சுவை அபார வாஞ்சையுடன் வளர்த்து வந்த அவர் தான், அவனுடைய படிப்புக்கும், ஹாஸ்டல் செலவுகளுக்கும் மாசம் எழுபது ரூபாய்ப் பணமும் அனுப்பி வந்தார்.

ஹாஸ்டலில் பஞ்சுவின் அறை கிழக்குப் பக்கம் பார்த்திருந்தது. ஹாஸ்டல் கட்டிடத்துக்கு அடுத்தாற்போல் ஒரு பழைய ஓட்டு வில்லை வீடு; பெரும் பகுதி இடிந்திருந்த அந்த மனை தன்னுள்ளே வசிக்கும் குடும்பத்தினரின் வறுமைக்கு எடுத்துக் காட்டாக விளங்கியது.

ஆனால் முட் புதர்களிடையே மணக்கும் தாழம் பூவைப்போல், அக்குடும்பத்தினரின் ஏழ்மையின் மையத்திலே மலர் போன்ற அழகிய பெண் ஒருத்தி வளைய வந்து கொண்டிருந்தாள்.

ஹாஸ்டலில் தன் அறையின் ஜன்னலண்டை உட்கார்ந்து பார்த்தால் பஞ்சுவுக்கு அடுத்த வீட்டுப் பட்டசாலை தெளிவாகத் தெரியும். கல்யாணி என்ற அப் பேசும் பதுமையை அங்கே காணும் பொழுதெல்லாம் பஞ்சுவுக்கு உள்ளம் குதூகலிக்கும்; உடல் புளகாங்கித மடையும். தப்பித் தவறிக் கல்யாணியின் குவளை மலரை யொத்த கருவிழிகளும், பஞ்சுவின் கனவு ததும்பும் கண்களும் ஒன்றையொன்று தூரத்திச் சந்தித்து விட்டாலோ, அவன் மெய் சிலிர்ப்பான். உடல் திரவமாக உருகி ஓடி விட்டதைப் போல் உணருவான். இதைக் 'காதல்' என்று சொல்லாமல் வேறு என்ன பெயரிட்டு அழைப்பது!

காலப் போக்கில் கடைத் தெருவிலும், கோயில் பிரகாரத்திலுமாகப் பஞ்சநதம் கல்யாணியைச்

சந்தித்துப் பேசினான். நாளுக்கு நாள் அவர்களிடையே மலர்ந்த அன்பு வளர்ந்து வருகையில், இருவரும் மனம் ஒன்றி ஒன்றாயினர்.

இருப்பினும் இனிமையான பதார்த்தத்தை ருசித்துச் சாப்பிடும் போது தானே, நடுவே 'நறுக்' கென்று ஒரு கல் அகப்பட்டு அதன் சுவையைக் கெடுக்கின்றது! அதைப் போலவே இந்த இளஞ் ஜோடியின் காதல் நாடகமும் இன்ப கதியிலேயே செல்ல முடியவில்லை. திடீரென்று ஒரு நாள் பஞ்சு விடம் வந்து, "யாரோ எங்களுக்குத் தூரத்து உறவுப் பையனாம்; அந்த வரனை எனக்குப் பார்ப்பதற்காக அப்பா வெளியூர் போயிருக்கிறார்!" என்று புலம்பிக் கொண்டே கல்யாணி மொழிந்த போது, பஞ்சநதம் அடி பெயர்ந்த மரம் போல் அயர்ந்து விட்டான். எதிர்பாராத ஏமாற்றம் ஒரு கணம் அவன் நெஞ்சையேஅடைத்துவிட்டது.

இருப்பினும் நிதானித்துக் கொண்டு, "கல்யாணி! நீ கவலைப்படாதே. உன் அப்பா வந்ததும் நானே அவரிடம் நேரில் பேசி நம் கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்கிறேன்!" என்று தேறுதல் கூறினான் பஞ்சநதம்.

ஆனால் அது முடிந்ததா! கல்யாணி பஞ்சுவிடம் விடை பெற்றுக் கொள்வதற்கு முன்னமேயே, அவனுக்கு ஒரு தந்தி வந்து சேர்ந்தது: "பெரியப்பாவுக்கு அபாயம்; உடனே புறப்பட்டு வரவும்!"

பாவம், பஞ்சு என்ன செய்வான்! பெற்ற பிள்ளைக்கு மேலாக வாஞ்சை காட்டி அவனை இது வரை வளர்த்தவர் மரணப் படுக்கையில் இருக்கும் போது, அவன் போகாமலிருக்க முடியுமா! "கல்யாணி! தூய்மையான காதலுக்குத்தான் சோதனை அதிகம் என்பார்கள்; அது நம் விஷயத்தில் உண்மையாக இருக்கிறது. நீ எதற்கும் கண் கலங்காதே; நான் மன்னார்குடிக்குச் சென்று விட்டு இரண்டே நாட்களில் திரும்பி விடுகிறேன்!" என்றான் ஏக்கம் கனக்க.

கல்யாணி பதில் பேசாமல் விம்மி விசும்பினாள்; அவளுடைய கயல் விழிகள் கண்ணீரில் நீந்தின.

இதைக் கண்டு கலக்கமுற்ற பஞ்சநதம், "கல்யாணி! ஏன் அழுகிறாய்! எங்கே, என்னைப் பார்! உனக்கு நான் ஊரிலிருந்து என்ன வாங்கி வரவேணும்!" என்று ஆசை தெறிக்கக் கேட்டான், அவளைப்பார்த்துக்கொண்டே. பிறகு அவளுடைய மோவாயைப் பிடித்து உயர்த்தினான்.

"எனக்கு ஒன்றும் வேண்டாம்; நீங்கள் சீக்கிரம் திரும்பி வந்தால் போதும்!"

"ச்சே...அசடே! அப்படிச் சொல்லாதே; ஏதாவது கேளேன்!" மேலும் வற்புறுத்திக் கொண்டே கல்யாணியின் கதுப்புக் கன்னத்தைக் கிள்ளினான் பஞ்சு.

"ஒரு இமிடேஷன் முத்துமாலை வாங்கி வாருங்கள்; உங்கள் அன்பின் அடையாளமாக நான் கேட்கும் அந்த அன்புச் சரம் விலையில் மட்டமாக இருந்தாலும் பரவாயில்லை. அது எனக்கு விலை மதிக்க முடியாததாக இருக்கும்!" என்றாள் கல்யாணி.

## 3

**ப**ஞ்சநதம் மன்னார்குடிக்குப் பறந்து சென்றான். ஆனால் அவன் எதிர்பார்த்தபடி பெரியப்பாவின் உடல் நிலைமை சீக்கிரம் குணமாகக் கூடியதாக இல்லை. ஒரு வாரத்திற்கெல்லாம், தன் சொத்துக்களையும், அவர் நடத்தி வந்த நவநாகரிகக் கடையையும் பஞ்சநதத்தினிடமே ஒப்படைத்து விட்டு நிம்மதியாகக் கண்களை மூடி விட்டார் அவர்.

பாவம்; பஞ்சு அழுது புலம்பினான், அமைந்தான். தொடர்ந்து, ஈமக் கடன்கள் யாவும் முடிந்த பிறகு, முதற் காரியமாகத் தன் கடையிலிருந்தே ஒரு நல் முத்து மாலையைக் கல்யாணிக்காக எடுத்துக் கொண்டு, திருச்சிக்குப் புறப்பட்டான்.

அங்கே அவனுக்கு ஒரு தாளமுடியாத அதிர்ச்சி காத்திருந்தது. கல்யாணியை உறவுப் பையன் ஒருவனுக்கே விவாகம் செய்து கொடுப்பதாகத் தீர்மானித்து, நிச்சயதார்த்தம் கூட நடந்து விட்டதாகத் தெரிந்தது! என்ன ஏமாற்றம்! இனி கல்யாணியைக் கண்டு பேசக் கூட அவனுக்கு உரிமை ஏது! சோர்ந்து, சுகமிழந்து, சோகத்தின் ஏகஸ்வரூபமாய் முத்துமாலையுடன் மன்னார்குடிக்குத் திரும்பி வந்தான் பஞ்சநதம்.

அன்றைக்குப் பிறகு தன்வாழ்வே செத்து விட்டதாகக் கற்பித்துக் கொண்டு விரக்தியாகக் காலம் தள்ளினான் பஞ்சு. கடை வேலை ஒன்றைத் தவிர வேறு எதிலும் அவன் மனம் நாட்டம் கொள்வதில்லை. பஞ்சுவின் மாமா ஒருவர் தமது அழகிய பெண்ணை மணந்து கொள்ளும்படி எவ்



P. [illegible]

# அன்றாடம் 2 நிமிஷங்கள் செலவழித்தால் போதும் . . . . நீங்கள் பூரண எழிலுடன் திகழலாம்



பிரதி இரவிலும் பாண்ட்ஸ் கோல்ட் க்ரீமை உங்கள் சருமத்தில் தடவி நன்கு தேயுங்கள்—ஒரே ஒரு நிமிஷம் தான் ஆகும். அதிலுள்ள எண்ணெய்கள் சருமத்தில் ஊடுருவிச்சென்று, மயிர்க் கால்களில் படிந்திருக்கும் சிறு சிறு தூசியையும் அழுக்கையும் வெளியேற்றி விடுகிறது. சருமத்தை மெதுவாகத் துடைத்து, அது எவ்வளவு பரிசுத்தமாக விளங்குகிறதென்பதைப் பாருங்கள்.

இவ்வற்புத க்ரீமை இன்னும் கொஞ்சம் எடுத்து முகத்திலும் கழுத்திலும் பூசிக்கொள்ளுங்கள். இரவு முழுவதும் அது அப்படியே இருக்கட்டும். காலையில் எழுந்தவுடன் உங்கள் மேனி மிக துல்லியமாயும் பூரண பொலிவுடனும் விளங்குவதைக் கண்டு அதிசயிப்பீர்கள்.



பிரதிதினம் காலையிலும் ஒரு நிமிஷம் உங்கள் முகத்தில் பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமை மெதுவாகத் தடவுங்கள். அது பூரணமாக மறைந்துவிடும். சருமம் பட்டுப்போன்று மழமழப்பாகவும் அற்புதச் சோபையுடனும் விளங்கும்.

கண்ணுக்குப் புலப்படாத வகையில் முகத்தில் மறைந்துள்ள இந்த பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் திரைப்படலம் பகல் முழுவதிலும் உங்கள் எழிலைப் பாதுகாக்கும். உங்கள் மிருதுவான சருமத்திற்கு இந்த பாதுகாப்பு அவசியம்—முக்கியமாக வரட்சைக் காற்றிலும் சூரிய கிரணங்களின் வெப்பத்தாலும் சருமம் துவண்டு போகாமல் காப்பாற்றி வர அத்யாவசியம்.

உங்கள் சருமத்திற்கு இவ்விரட்டைப் பராமரிப்பு ஒவ்வொரு காலமும் தேவை. பாண்ட்ஸ் க்ரீம்கள் இரண்டையும் அன்றாடம் தவறாமல் உபயோகித்து உங்கள் அழகிற்கு அழகு ஊட்டுங்கள்!






உலகில் எங்குமே பெண்மணிகள் தங்கள் எழிலை புதுமை குன்றாமல் பாதுகாக்க பாண்ட்ஸ் க்ரீம்கள் இரண்டையுமே உபயோகிக்கின்றனர். அவர்கள் இயற்கை அழகின் இரகசியம் அதுதான்.

முக சிங்காரிப்புக்குத்தான், பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் தடவிக்கொண்டால் அதன்மேல் பௌடர் பூசுவது மிக எளிது அழகாயுமிருக்கும், ஞாபகமிருக்கட்டும்.

**பாண்ட்ஸ்**

ளவோ அவனை வற்புறுத்தினர். ஆனால் பஞ்சநதம் எதற்காவது செவி சாய்த்தால் தானே! இத்தனைக்கும் மாமாவின் பெண் சியாமளி கொள்ளை அழகியாம்; கல்யாணியைவிட ஒரு படி மேலாகவே இருப்பாளாம்!

நிற்க, வெகுநாள் வரை அவன் கல்யாணிக்கென்று தேர்ந்தெடுத்த முத்துமாலை பஞ்சுவின் மேசையின்மீதே கிடந்தது. அடிக்கடி அதைக் கையில் எடுத்து வைத்துக்கொண்டு கல்யாணியை நினைத்து மனம் புழுங்குவான் பஞ்சு. முடிவில் அதற்கும் முற்றுப்புள்ளி வைப்பதுபோல் விஷயமறியாத கடை ஆள் அதை எடுத்து விளம்பரப் பெட்டியிலே தொங்க வைத்து விட்டான்!

அதை மீண்டும் அங்கிருந்து எடுத்தால், யாராவது ஏதாவது நினைப்பார்களோ வென்ற எண்ணத்தில் மாலையை அங்கேயே வைத்து விட்டு வாளாவிருந்து விட்டான் பஞ்சநதம். ஆனால் இப்படியொரு விசித்திர வாடிக்கைக்காரி திடீரென்று தோன்றி அதை விடாப்பிடியாகக் கேட்பாள் என்று அவன் எதிர்பார்க்கவில்லையே! பெரியவர்களாக இருந்தால், 'அது விற்பனைக்கில்லை' யென்று சொல்லி விடலாம்; அவர்கள் புரிந்து கொள்வார்கள்! ஆனால் இச்சிறுமி...!

## 4

"என்ன மாமா, தின்னுண்டே தூங்கறேளா! அந்த மாலையை எடுங்களேன்!" என்ற குழந்தையின் குரலைக் கேட்டதும் தன் நினைவிலிருந்து விடு பட்டான் பஞ்சு.

உடனே, "இது பெரிய மாலை ஆச்சே! உனக்குச் சரியாக இருக்காது, அம்மா!" என்று பகர்ந்தான் பஞ்சு, குழந்தையின் மனசை வேறு பொருள்களின் மேல் திருப்பும் நோக்கத்துடன்.

"அது பெரியவாளுக்குத்தான் மாமா! எங்க அம்மாவுக்கு! எங்கப்பா இருக்காரே, அவர் பொல்லாதவர்; இன்னிக்குக் கார்த்தாலே அம்மா ஒரு மாலை வாங்கிண்டு வாங்கோன்னு சொன்னதுக்கு, 'நான்ஸென்ஸ்... அப்படி இப்படின்னு இங்கிலீஷ்லே வைதுட்டுப்போயிட்டார்! பாவம்; அம்மா அழுதாள்!"

"அதனாலே!..."

"நான் இதை வாங்கிண்டு போய் அம்மாவுக்குக் கொடுக்கப் போறேன்! 'அடி என் கண்ணே'ன்னு அப்படியே கட்டிண்டு, ஏழு ஒம்பது, ஆயிரம் தடவை அம்மா என்னை முத்தமிடுவா! எங்கம்மா ரொம்ப நல்லவள்; உங்களுக்குத் தெரியுமோ!" என்று கேட்டாள் அந்தச் சிறுமி.

"தெரியாதே!" என்று சிரித்தான் பஞ்சநதம். வெகுளியான அப்பசலையின் உள்ளம் கள்ளமறியாது தன் பெற்றோர்களிடையே ஏற்பட்டிருந்த தாம்பத்யக் கலகத்தை இப்படி வெளியே சொல்லி ஊர் சிரிக்கச் செய்வதை நினைக்கையில் அவனுக்கு அதிசயமாக இருந்தது.

அத்துடன் அக்குழந்தையின் பேச்சு அவன் உள்ளத்தைத் தொடுகையில் பஞ்சுவுக்கு அவள் மீது ஒரு அலாதி அன்பு பிறந்தது. உடனே, "ஏம்மா! இந்த மாலையை வாங்க உன்னிடம் காசு இருக்கா!" என்று கேட்டான் விளையாட்டாக.

"ஓ! இருக்குங்கோ......" அச் சிறுமி தனது கவுனின் பைக்குள்ளே கையை விட்டுத் துழாவி



ஏதோ சில்லறையை எடுத்துப் பஞ்சுவிடம் நீட்டினாள். தாமரை இதழை யொத்த விரிந்த அக் குஞ்சுக் கரத்திலே ஐந்து காலணாக் காசுகள்!

பஞ்சுவுக்கு வேடிக்கையாக இருந்தது. பதினைந்து ரூபாய் பெறக்கூடிய மாலைக்கு ஒன்றேகாலணாவை நீட்டுகிறாளே, இக் கபடமற்ற சிறுமி! "ஏனம்மா, இதில் எவ்வளவு எனக்குக் கொடுக்கப் போகிறாய்! இந்த மாலையின் விலை உனக்குத் தெரியுமோ!" என்று கேட்டான் பஞ்சநதம்.

"தெரியாது, மாமா! நீங்க எல்லாக் காசையும் எடுத்துக்கோங்கோ; எல்லாம் உங்களுக்குத்தான்! எனக்கு மாலை வேணும்!"

ஒரு கணம் யோசித்தான் பஞ்சநதம். சிறுமியின் பேச்சு அவன் நெஞ்சை உருக்கி விட்டிருந்தது. இனியும் அப் பிஞ்சு மனத்தை ஏமாற்ற

அவன் உள்ளம் துணிவு கொள்ளவில்லை. இறுதியில், "கல்யாணிக்கென்று வாங்கிய இந்த அன்புச் சரத்தை வீணாக்காமல், கடவுளைப்போல் தூய்மையான குழந்தையிடமே சேர்ப்பது நல்லது!" என்று எண்ணியது அவன் மனம்.

உடனே அச் சிறுமியிடமிருந்து ஒன்றே கால் ரூபாயைப் பெற்றுக் கொண்டு மாலையை எடுத்துக் கொடுத்து விட்டான் பஞ்சநதம். குழந்தை கும்மாளம் போட்டுக் கொண்டு கையில் மாலையுடன் வெளியே ஓடினாள்.

## 5

அன்றிரவு ஒன்பது மணியிருக்கும். வேலைக்காரர்களை வீட்டுக்கு அனுப்பி விட்டுத் தான் மட்டும் உட்கார்ந்து கணக்கு வழக்குகளைப் பார்த்துக் கொண்டிருந்த பஞ்சநதம் மெல்ல எழுந்திருந்தான். பிறகு விளக்கை அணைத்து விட்டு வெளியே வந்து கடைக் கதவை இழுத்து மூடும் சமயம், "கடைக்கார ஐயா!" என்ற குரல் கேட்டதும் திரும்பிப் பார்த்தான்.

யாரோ ஒரு பெண்மணி சாலையில் கடை ஓரமாக நின்று கொண்டிருந்தாள், இருட்டில்!

"என்னம்மா வேணும்! கடையைக் கட்டிக் கொண்டிருக்கிறேனே!" என்று இழுத்தான் பஞ்சநதம்.

"இன்றைக்கு நீங்கள் தானே என் குழந்தைக்கு முத்து மாலை கொடுத்தது! அதற்கான தொகையைக் கொடுப்பதற்காக வந்திருக்கிறேன்..." என்றாள் அந்தப் பெண்மணி.

"தொகையா! உங்கள் பெண்தான் யாரும் கொடுக்க விரும்பாத பெரிய தொகை கொடுத்து விட்டாளே!" என்று சிரித்தான் பஞ்சு.




"இத்தனை போட்டிகளில், எந்தப் போட்டியில் பணம் கட்டினேன் என்று தெரியவில்லை, ஸார்!"

"கவலைப் படாதீங்க. பணம் வராததற்கு எந்தப் போட்டியில் கட்டினால் என்ன?"

"அப்படி யென்றால்!"

"குழந்தை தன்னிடமிருந்த எல்லாவற்றையும் என்னிடம் கொடுத்தாள்! பெரியவர்கள் அப்படிக் கொடுப்பார்களா!"

"நன்றாயிருக்கிறதே! ஒன்றே கால் ரூபாவுக்கு நல்முத்து மாலையா! அதன் விலை என்ன!" என்றாள் அப்பெண்மணி.

பேச்சு வளர்வதைக் கண்ட பஞ்சநதம், "என்னைப் பொறுத்த வரையில், இது விலை மதிப்பிட முடியாத மாலையம்மா!" என்று கூறிக் கொண்டே உள்ளே சென்று விளக்கைப் போட்டான்.

மறுகணமே விளக் கொளியில் அப்பெண்மணியைப் பார்த்ததும், "யாரது...! கல்யாணியா!" என்று அதிசயத்துடன் வினவினான் பஞ்சு.

கல்யாணியும் ஒருவினாடி வியப்பினால் ஸ்தம்பித்து நின்று விட்டாள். பிறகு, "நீங்கள் சௌக்கியமாக இருக்கிறீர்களா!" என்று கேட்டாள்.

"சுகம்தான், கல்யாணி! ஆனால் நீ சந்தோஷமாக இருக்கிறாயா! உன் கணவர் உன் அருமை தெரியாதவர் போலல்லவா நடந்து கொள்கிறாராம்!" என்று கவலையுடன் கேட்டான் பஞ்சு.

"யார் சொன்னார்கள்! குழந்தை ஏதாவது பிதற்றினாளோ! உங்களைப் போல் அன்பு மயக்கத்தில் என் பேச்சுக்கு எதிர் சொல்லாமலும், கேட்பதை உடனே வாங்கித் தருபவராகவும் அவர் இல்லைதான்! ஆனால் பெண்கள் கணவனைக் கைக்குள் அடக்கிக்கொள்ள விரும்புவது போலவே, சில சமயம் கணவனால் அடக்கப்பட்டு வாழவும் விரும்புவார்கள்! அந்த வாழ்க்கைதான் இனிக்கும். நான் சந்தோஷமாகவே இருக்கிறேன்!"

"அப்படியானால் என் மனமும் நிம்மதியடைந்து விட்டது, கல்யாணி! தவிர நான் உனக்கென்று வாங்கிய அன்புச் சரம் எதிர் பாராத விதத்தில் உன்னையே அடைந்து விட்டதே!"

"அதுதான் உண்மை அன்பின் சக்தி, அண்ணா! சரி, நான் வருகிறேன். 'அவர் நண்பர்களோடு சினிமாவுக்குப் போனார்; வரும் நேரமாகி விட்டது. நான் போய் அவருக்குச் சாப்பாடு போட வேண்டும்; நான் பக்கத்தில் இலலாவிட்டால் அவர் சரியாகவே சாப்பிடுவதில்லை!" என்றாள் கல்யாணி சிரித்துக் கொண்டே.

"போய் வா, கல்யாணி!"

"ஒரு விஷயம், அண்ணா! உங்கள் கல்யாணத்துக்கு எனக்குப் பத்திரிகையனுப்ப மறந்து விடாதீர்கள்; என் மன்னியை நான் பார்க்க வேண்டாமா!" என்று கூறி விட்டுப் படி இறங்கி இருளில் மறைந்தாள் கல்யாணி.

"பெண்களே விசித்திர மானவர்கள்! கல்யாணி நடந்ததை மறந்து விட்டு எப்படியிருக்கிறாள்? ஆனால் நான்!" என்று முணுமுணுத்தது பஞ்சுவின் வாய். அத்துடன் ஏதோ மனக் கலக்கம் தெளிந்தது போல் நீண்டதொரு பெருமூச்சு அவன் உள்ளத்தை உவப்பிக் கொண்டு வந்து காற்றிலே கலந்தது.

மறுநாளே 'முகூர்த்தம்' வைக்கும்படி அவன் மாமாவுக்குக் கடிதம் எழுதிய உண்மையை இங்கே எழுதவும் வேண்டுமா!

அட்டைப்படப் பரிசுக்கதை



# தங்க மாளிகை

## குமாரி மணியன்

அன்று பள்ளியின் வருடாந்திர விழா. 'கமலா வித்யாலயா' கட்டிடம் பூராவிலும் ஒரே பரபரப்பு. பல வர்ணப் பட்டுப் பூச்சிகள் போல் மாணவிகள் அங்கும் இங்கும் பறந்து கொண்டிருந்தனர். வருட விழாவுக்காகப் பிரமாதமான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. பிரம்மாண்டமான தோரணங்களும், வளைவுகளும், அப் பள்ளியின் அழகுக்கு அழகு செய்தன. தலைவி ராஜம்மாள் எதைச் செய்தாலும் சிறப்பாகச் செய்பவள். அவள் முயற்சியால் தான் சிறு ஓட்டுக் கட்டிடத்தில் ஆரம்பித்த "கமலா பெண்கள் பாடசாலை" இன்று யாவரும் கண்டு வியக்கும் வண்ணம், மூன்று மாடிகள் கொண்ட 'கமலா வித்யாலய'மாக மாறிற்று. ராஜம்மாள் உலகம் தெரிந்தவள். ஊரில் உள்ள பெரிய மனிதர்கள் எல்லாரும் அவளுக்கு மிகவும் வேண்டியவர்கள். பெரிய உத்தியோகஸ்தர்கள்கூட ராஜம்மாளைப்போல் நல்லவர் கிடையாது என்பார்கள். ஒவ்வொரு பள்ளி விழாவுக்கும் பிரபலஸ்தர்கள் யாரையாவது கூப்பிட்டுத் தலைமை வகிக்கச் செய்து பள்ளியின் அந்தஸ்தை உயர்த்துவது ராஜம்மாள் வழக்கம்.

இந்த வருட விழாவுக்கு, சேகர் ஐ. ஏ. எஸ். தலைமை வகிக்கிறார். அவர் மனைவி ஜயா சேகர் பரிசுகள் வழங்குகிறார். இருவரும் மிக்க கலாரசனை உள்ளவர்கள். ஆகையினால் வருட விழாக் கலை நிகழ்ச்சிகளை ராஜம்மாள் மிகவும் நல்ல முறையில் ஏற்பாடு செய்திருந்தது பற்றி ஆச்சரியமில்லை.

ராஜம்மாளுக்கு எப்பொழுதுமே குமாரியைக் கண்டால் பிரியம் அதிகம். குமாரி வகுப்பில் முதலாவதாக இருக்கிறாள் என்பதனால் மட்டும் அல்ல. அவள் அழகு மிக்க சிறுமி என்பதனால் மட்டும் அல்ல. குமாரி மிக மிக அழகாகச் சித்திரம் வரைகிறாள் என்பதனால்கூட அல்ல. அவள் தேனினுமினிய குரலில் பாடக் கூடியவள் என்பதனால்கூட அல்ல. அவளது சாந்த குணம்தான் ராஜம்மாளை மிகவும் கவர்ந்தது. மேற்கூறிய எல்லா வகையிலும் தேர்ந்த குமாரியின் சாந்த மிக்க குணம் ராஜம்மாளை மிகவும் வசீகரித்தது. மூன்றும் படிவம் படித்துக் கொண்டிருந்த குமாரி பள்ளித் தலைவி ராஜம்மாளின் அன்பைக் கவர்ந்து விட்டதில் வியப்பேயில்லை. பள்ளி விழாவில் நடக்க இருக்கும் "கனவு" என்ற நாடகக் காட்சியைத் தமது முழு ஆர்வத்துடன் தயாரித்த ராஜம்மாள் அதில் கதாநாயகி பாகத்தைக் குமாரிக்கே கொடுத்தாள். இது பற்றிக் குறை கூறுவோர் யாருமேயில்லை அந்தப் பள்ளியில். ஏனெனில் அந்தப் பாகத்தை ஏற்று நடிக்கக் குமாரியைத் தவிர சிறப்பானவர் வேறு யாருமில்லை அங்கு.

"காணாமற் போன தனது காதலனைத் தேடி அலைவது போன்ற காட்சி." காளிதாசன் மேகவிடு தூதை மாற்றிச் சிறுமியர்களுக்காக அமைத்த காட்சி. அன்றுதான் கடைசி ஒத்திகை.

"ஆகாயத்தில் சஞ்சரிக்கும் மேகங்களே! நீங்கள் தூது செல்வதில் வல்லவர்கள் என்பது, காளிதாசன் காலத்திலிருந்தே கண்ட உண்மை. நீங்கள் எனக்குத் தூது செல்ல வேண்டாம். கனத்த மழைத் துளிகளைத் தாங்கி வரும் நீங்கள் சமுத்திரம், ஆறு, குளம், இவைகளை நிரப்பக் கூடிய அளவுக்குத் தண்ணீரைத் தாங்கி வரும் நீங்கள்—எனது இனிய காதலனைத் தாங்கி வர முடியாதா! ஏன்! முடியாதென்றால்—இல்லை—என்று கூறி விடுங்களேன். நீங்கள் வாய் திறக்க மகா கவிகள் வர வேண்டுமோ—என் போன்ற






சிறுமியர்க்கு இரங்க மாட்டீரோ!" இப்படியாக நாடகத்தின் கடைசி அங்கம் முடிந்தது.

உடனே ராஜம்மாள் எழுந்து வந்து குமாரிக்குத் திருஷ்டி கழித்தாள். "நீ நன்ருகயிருக்க வேணும். திருஷ்டி வாராமல் இருக்க வேணும்" என்ருள்.

ராஜம்மாளுக்குக் குமாரியின் மீது அன்பு ஏற்பட வேறொரு முக்கிய காரணமும் உண்டு. குமாரி தாயற்றவள்; குமாரியின் தகப்பனர் ஒரு ஏழைக் குமாஸ்தா. அவருக்கு மாதம் ஐம்பது ரூபாய் சம்பளம். அதற்குள் ஐந்து ஜீவன்கள் காலம் தள்ள வேண்டும். குமாரியின் தாயாரின் மறைவுக்குப் பின் அவள் அத்தைதான் வீட்டோடு இருந்து கவனித்து வந்தாள். குமாரிக்கு இரண்டு தங்கைகள் உண்டு.

பெண்ணின் அழகையும், புத்திசாலித்தனத்தையும் கண்டு பெருமூச்செறிவார் சர்மா. அவர்தான் குமாரியின் தந்தை. தன்னல் ஒரு சிறு பொன் நகைகூட அவளுக்குச் செய்து போட முடியவில்லையே என்ற வருத்தம் மிக உண்டு அவருக்கு. மனைவி செல்லம் போவதற்கு முன்பே அவளது நகைகள் வட்டிக் கடைக்காரரின் பெட்டிக்குப் போய்ச் சேர்ந்து விட்டன. ராஜம்மாளின் ஆதரவினல் பெண்களின் படிப்பு இலவசமாக நடந்து வந்தது. கலியாண வயது வர இன்னும் நாளிருந்தாலும், அப்பேச்சைப் பற்றி நினைக்கவே கலங்கினர் சர்மா. படிப்பும், பாட்டும், அழகும் மட்டும் போதுமா! பணம்! பணம் அல்லவா வேண்டும்! அதற்குச் சர்மா எங்கே போவார்!

சிறுமி குமாரி பள்ளிக்கூடத்தில் பல பெண்கள் பகட்டாக வருவதைப் பார்த்துப் பார்த்துப் பெருமூச் செறிவாள். சிறுமியாகிய அவளுக்குத் தானும் அம்மாதிரி நகைகள் அணிய வேண்டும் என்ற ஆவல் எழும்! ஆயினும் பயன் என்ன! ராஜம்மாள் புத்தகம் இனமாகக் கொடுக்கலாம். இலவசமாகப் படிக்க வைக்கலாம். ஆனல் நகைகள் செய்துபோட முடியுமா! கடவுள் அல்லவோ இவ்விஷயத்தில் கண் திறக்க வேண்டும்!

கமலா வித்யாலய நாடக மண்டபத்தின் ஒலிபெருக்கிகள் முழங்குகின்றன. "திக்குத் தெரியாத காட்டில் உனைத் தேடித் தேடி இளைத்தேனே" என்ற கீதம் கேட்கிறது. "கனவு" ஆரம்பமாகி விட்டது — நாடகக் கனவுதான். கமலா வித்யாலயா கலை மண்டபத்தில் எள் போட்டால் உடனே எண்ணெய் ஆகிவிடும். அவ்வளவு கும்பல் கூடியிருந்தது.

முதல் காட்சியில் குமாரி பாடிக்கொண்டு வருகிறாள். பரிசு வழங்குதல், அறிக்கை வாசித்தல் இவைகளில் கலந்துகொண்டு சோர்ந்திருந்த சேகர் ஐ. ஏ. எஸ். கூட நிமிர்ந்து உட்கார்ந்தார். உள்ளூர் போலீஸ் அதிகாரி ஒரு வெள்ளையர். அவர் கூட "பிரமாதம்!" "ரொம்ப ஜோர்!" என்று முணுமுணுத்தார். தலைவி ராஜம்மாள் சேகரின் பக்கத்தில் பெருமிதத்துடன் அமர்ந்திருந்தாள்.

நாடகம் நடக்கும்போது, சேகர் தன்னையே மறந்து விட்டான். அங்குள்ளோர் யாவரும் அப்படித்தான். குமாரியின் ஆட்டத்தைக் கண்டவர் ஆட்டத்தையே கண்டார்கள். அவள் பாட்டைக் கேட்டவர் பாட்டையே கேட்டனர். பத்தே வயதான சிறுமி குமாரியின் ஆட்டமும், நடிப்பும், கானமும் யாவரையும் கவர்ந்து விட்டன.

கடைசிக் கட்டம். மேகத்தைப் பார்த்து விளிக்கிறாள் குமாரி. "ஆகாயத்தில் சஞ்சரிக்கும் மேகங்களே!" என்று அன்புடன் கவியமைத்து அவைகளைத் தூது அனுப்புகிறாள்.

"அபாரம்!" என்றார் சேகர். "பேஷ்!" "பேஷ்!" இது போலீஸ் அதிகாரி. அமைதியுடனிருந்த அந்த அரங்கிலே இவை பளிச்சென்று கேட்டன. இது கேட்டு நிமிர்ந்த சிறுமி குமாரியின் முகம் சிவந்து விட்டது. நாடகத்தை ஒரு வழியாக முடித்து விட்டு உள்ளே சென்று விட்டாள். திரை விழுந்தது. ஒரே கரகோஷம். தலைவர் பேசினார். "இன்று நாம் நாடகம் பார்த்தமாதிரியே இல்லை. ஒரு உண்மை நிகழ்ச்சியைக் கண்ட ஆனந்தம் ஏற்படுகிறது. அரசன் மகளாக நடித்த சிறுமி நமது உள்ளங்களைக் கவர்ந்து விட்டாள். 'திக்குத் தெரியாத காட்டில்' என்று பாடிய அந்தத் தேனினும் இனிய குரல் நமது காதில் பல நாட்கள் ஒலித்துக் கொண்டிருக்கும் என்பதில் ஐயமில்லை" என்றார்.

இதைக் கேட்ட குமாரிக்கு ஆனந்தம் தாங்க முடியவில்லை. தான் ஏழைக் குமாஸ்தா சர்மாவின் தாயில்லாப் பெண் என்பதை மறந்தாள். உண்மையிலேயே அமலாபுரி அரசன் மகள் எனக் கருதினாள். அவள் உடுத்தியிருந்த பட்டு ஆடைகளும், அணிந்திருந்த நகைகளும் இதை ஊர்ஜிதப்படுத்தின. அப்படி எத்தனை நேரம் நின்றாளோ தெரியாது. 'சேது வாத்தியாரம்மாள்' அவளை உலுக்கிய உடன்தான் அவள் சுய ஞாபகம் பெற்றாள். நாடகத்துக்காக இரவல் வாங்கி வந்த நகைகளும், ஆடைகளும் அவளிடமிருந்து வாங்கப்பட்டன. பழைய பாவாடையும் சட்டையும் திருப்பி அணிக்கப்பட்டன. 'உலகம் இதுதான்' எனக் குமாரி உணர்ந்தாள். எல்லோரும் அவளைப் புகழ்ந்தார்கள். பள்ளிக்கூடத் தலைவி ராஜம்மாள், 'நீ ஒரு நந்தாவிளக்கு' என்று புகழ்ந்தாள். தான் உண்மையிலேயே ஒரு அரசகுமாரிதானோ என்று எண்ணிக் குமாரி மனத்துக்குள் மகிழ்ந்து கொண்டாள்.

மணி ஒன்பதாகி விட்டது. ராஜம்மாளிடம் விடை பெற்றுக் கொண்டு, குதி போட்டுக் கொண்டே குதூகலமாக வீடு வந்து சேர்ந்தாள். தந்தை எங்கோ வெளியில் போயிருந்தார். யாரிடமாவது கடன் கேட்கப் போய்



இருப்பார். வீட்டில் எப்பொழுதும் இருக்கும் அத்தைதான் இருந்தாள். "ஏண்டியம்மா! இவ்வளவு நாழி ஆகிவிட்டதா! திருஷ்டிப் படாமல் இருக்க வேணும்" என்று கூறிச் சாம்பிராணி போட்டு, திருஷ்டி கழித்தாள். மன எழுச்சியில் சாப்பாடு வேண்டாமென்று படுத்தாள் குமாரி.

** ** **

குமாரி படுக்கையில் சற்று நேரம் புரண்டு கொண்டே இருந்தாள். அடுத்த கணம் அப்படியே கண் அயர்ந்து விட்டாள். அவள்தான் தூங்கினாளே ஒழிய, அவள் சிந்தனை தூங்கவில்லை. அது எங்கோ சஞ்சரிக்கத் தொடங்கி விட்டது. கனவு! ஆம்! இப்போது உண்மையான கனவு.

"எனது ராசாத்திக்குத் திருஷ்டி வராமலிருக்க வேண்டும்" என்கிறாள் அத்தை. உடனே மூரசொலி கேட்கிறது. கண்ணைப் பறிக்கும் பிரகாசமான ஜோதி. இதோ, இதோ, ஒரே சாம்பிராணிப் புகை—நல்ல மணம் கமழ்கிறது. பூமாரி பொழிகின்றன. மேகங்கள் பவனி வருகின்றன. "ஏ, ராஜகுமாரி நீ எங்களைக் கூவியழைத்தாயே! இதோ வந்து விட்டோம். எங்கே, என் உத்தரவு. உன் ஆணையைச் சிரமேற்கொண்டு செய்யக் காத்திருக்கிறோம்." மேகங்கள் பவனி வருகின்றன.

"திக்குத் தெரியாத காட்டில்" என்று யாரோ இனிமையாகப் பாடுகிறார்கள். ஆஹா! இது நீல வானம் போலல்லவா விளங்குகிறது. ஒரு கிளி உல்லாசமாகப் பறந்து வருகிறது. ஆமாம், கிளிதான். ஆனால் அதன் உடல் சிவப்பாக இருக்கிறது. சிவப்புக் கிளி. "ஏ, ராஜகுமாரி! நீ தேடியலைந்த மேகங்கள் இதோ வந்து விட்டோம்" என்று யாரோ சொல்லுகிறார்கள்.

குமாரிக்கு ஒரே வெட்கம். முகத்தை மூடிக் கொள்ளக் கையை எடுக்கிறாள். அதற்குள் கிணு கிணுவென மணியோசை கேட்கிறது. பறக்கும் குதிரை பூட்டிய பளபளவென்று மின்னும் தங்க ரதம் ஒன்று வருகிறது. "ராஜ புத்திரி! தாங்கள் கேட்டபடி மேகராஜா ரதம் அனுப்பியிருக்கிறார். ஏறுங்கள்" என்கிறார்கள் தூதர்கள்.

குமாரி பதில் கூறாமல் ரதத்தில் ஏறுகிறாள்.

யாரோ பாடுகிறார்கள், "திக்குத் தெரியாத காட்டில்" என்ற இனிமையான கீதம் காற்றிலே மிதந்து வந்து அவள் காதில் விழுகிறது.

குதிரைகள் பறக்கின்றன. அதோ! ஒரு பெரிய மாளிகை தெரிகிறது. பூராவும் தங்கத்தினால் செய்த மாளிகை. தங்கம்—உடனே குமாரிக்கு நான்கு நாட்களுக்கு முன் அப்பாவுடன் பேசியது ஞாபகத்துக்கு வருகிறது.

விரலுக்கு ஒரு சிறு மோதிரம் கேட்கிறாள். "தங்கத்தின் விலை மிக அதிகம்" என்கிறார் தந்தை சர்மா. இங்கே மாளிகையே தங்கத்தால் இருக்கிறதே. அப்பா தங்கத்தின் விலை அதிகம் என்றாரே — இதற்குள் யாரோ — பிடில் வாசிக்கிறார்கள். காற்றினிலே வரும் அந்த இனிய ஓசை மனத்திலே இன்பக் கிளுகிளுப்பை உண்டாக்குகிறது. வானமெங்கும் பொன்னிறமான நட்சத்திரங்கள்; வழியெங்கும் பொன்மயமான பூக்கள்; —தங்கத்தாலாய தேர்—தங்க மாளிகை—குளுமையான வெள்ளிக் கிரணங்களை அமைதியாக வீசுகிறான் ஆனந்தமயமான சந்திரன். தேர் பறக்கிறது. மாளிகை சமீபித்து விட்டது.

"ஒரு சிறு மோதிரத்துக்குத் தங்கமில்லை என்கிறாரே அப்பா"—பழைய நினைவுகள் வருகின்றன. காதில் போட்டிருக்கும் லோலக்குகள் கூட ராஜம்மாள் வாங்கிக் கொடுத்தது. அது கூடத் தங்கமில்லை. உயர் நீதி மன்றத்து நீதிபதியின்

★ ○ ★ ○ ★ ★ ○ ★ ○ ★ ○ ★ ○

## சுப சகுனம்!

மே 29உ கல்கி இதழில் கர்நாடக சங்கீத சபையின் காரியதரிசி எழுதியுள்ள பதிலைப் படித்தேன். உடனே எனக்குப் பழைய விகடத் துணுக்கு ஒன்று ஞாபகம் வந்தது:—

ஒருவர்:—உங்கள் சம்சாரம் வாய்ப் பாட்டு சாதகம் செய்யும்போது நீங்கள் ஏன் சார் வாசலிலேயே நிற்கிறீர்கள்!

மற்றவர்:—உள்ளே யிருந்தால் நான் அவளை அடிக்கிறேன் என்று நீங்கள் எல்லோரும் நினைத்துக் கொள்வீர்களே!

உங்கள் நிருபர் எழுதியிருந்த கடிதத்தில் கண்டிருந்த "ஸ்னுபரி" சம்பவத்தைப் பற்றிக் குறிப்பிட்டு மேற்படி காரியதரிசி "நடந்ததாகத் தெரியவில்லை; அப்படி நடந்திருந்தாலும் எங்களிடம் சொல்லி யிருக்கலாம்" என்று அங்கலாய்த்துக் கொண்டிருக்கிறார். சபையிலிருந்த 997 ரசிகர்களும் கவனித்த இந்த விஷயத்தைக் காரியதரிசியும் பாக்கி பத்து நிர்வாகக் குழுவினரும் கவனிக்காததற்குக் காரணம் மேற்படி துணுக்கு எடுத்துக் கூறுகிறது. கச்சேரி நடக்கும் போது எல்லோரும் வெளியிலே நின்று கொண்டு வரவேற்பதிலும் வழி யனுப்புவதிலும் கவனத்தைச் செலுத்துவதால் உள்ளே நடக்கும் சம்பவங்களை அறிய முடியாமலிருக்கிறார்கள். நல்லவேளை ஒரே யடியாய்ச் சம்பவம் நடக்கவேயில்லை என்று சொல்லாமல் நடந்ததாய்த் தெரியவில்லை என்று பட்டும் படாததுமாய்க் கூறியிருப்பது மிகவும் வரவேற்கத் தக்கதுதான்.

சபையின் தொண்டைப் பற்றியோ கச்சேரியின் தரத்தைப் பற்றியோ யார் குறை கூறினார்கள்? தங்கள் நிருபர்தான் சிலாகித்துள்ளாரே!

ஆனால் எவ்வளவு கசப்பான விஷயத்திலிருந்தும் ஒரு தித்திப்பான சம்பவம் ஏற்படும்.

உங்கள் நிருபர் கடிதம் வந்த சூட்டோடு சுறுசுறுப்பாய் ஒரு பொதுக் கூட்டம் போட்டார்கள். அதில் சபை அங்கத்தினர்களின் ஒத்துழைப்பையும் ஆசியையும் கோரி, குறைகளிருந்தால் தம்மிடம் எடுத்துரைக்கும்படி தலைவர் கேட்டுக் கொண்டார். இதை எதிர்பாராத ஒரு சுப சகுனமாய் எடுத்துக் கொள்கிறேன்.

டில்லியில் நடக்கும் இசை நிகழ்ச்சிகளைப் பற்றி ரசமாக விமரிசனம் செய்து வரும் தங்கள் நிருபர் மேலும் தொடர்ந்து இத்தொண்டு ஆற்றி வருவார் என்று நம்புகிறேன்.

புதுடில்லி
27—5—54

ஆ. வெ. சீனிவாசன்

★ ○ ★ ○ ★ ○ ★ ○ ★ ○ ★ ○ ★

பேத்தி ஒரே தங்க மயமாக வருகிறாளே—அவள் கருப்பு உடம்பில் வைரங்கள் கருவானத்து விண்மீன்கள்போல் பளிச்சிடுகின்றதே! அவர்களுக்கு மட்டும் தங்கம் எங்கேயிருந்து வருகிறது!

இதோ! இங்கே—எங்கும் தங்கம். குதிரை போட்டிகள் பார்க்காமல் இருந்த போது தங்க ரதத்தை இலேசாகக் கிள்ளிப் பார்த்தாள் குமாரி. ஊஹூம் அசைக்க முடியவில்லை. ஒரு மோதிரத்துக்கு வேண்டிய தங்கம்கூடக் கிடைக்காது போலிருக்கிறது — என்ன பிரயோசனம் — ஒருவேளை மாளிகைக்குள் ஏதாவது கிடைக்கலாம்.

யாரோ நாதசுரம் வாசிக்கிறார்கள்—மறுபடியும் பூமாரி—பளிச்சென்று ஒரு மின்னல் — உடனே

✶ ○ ✶ ○ ✶ ○ ✶ ○ ✶ ○ ✶ ○ ✶

## இந்தியாவில் ஹாரிபாலிட்

சமீபத்தில் மதுரையில் நடந்த கம்யூனிஸ்ட் கட்சியின் மகாநாட்டுக்கு இங்கிலாந்திலிருந்து அக் கட்சியின் பிரதிநிதியாகத் திரு ஹாரிபாலிட் வந்திருந்தார். அவர் இந்தியாவில் 1953-ம் ஆண்டு டிசம்பர் 12-ம் தேதியிலிருந்து ஜனவரி 7-ம் தேதி வரை செலவழித்த தினங்களின் நாட்குறிப்பாகும் இந்நூல். அவர் இந்தியாவில் பல பகுதிகளைச் சுற்றிப் பார்த்து, ஆங்காங்கு தாம் பெற்ற அனுபவங்களைத் தெளிவாகக் குறித்து வைத்திருக்கிறார். மதுரை மகாநாட்டுக்கு வந்திருந்தவர்களைப் பற்றி அவர் குறிப்பிடும் ஒரு ருசிகரமான தகவலைத் தயவு செய்து கேளுங்கள்.

"விவசாயிகளின் குடும்பங்களை ஏற்றிக்கொண்டு, நூற்றுக் கணக்கான மாட்டு வண்டிகளை இரவெல்லாம் ஓட்டிக் கொண்டு வந்திருக்கிறார்கள். இரவு முழுவதும் நடந்தே ஆயிரக் கணக்கான பேர் வந்திருக்கிறார்கள். டிக்கெட்டுகள் வாங்காமல் மதுரைக்கு வரும் ரயில்களில், நூற்றுக் கணக்கான மக்கள் கூட்டம் கூட்டமாகத் தொத்திக் கொண்டார்கள். ரயிலிலிருந்து அவர்கள் தப்பித்துப் போகும் முன்பு, அவர்களிடம் கட்டணம் வசூலிப்பதற்கு உதவியாக அதிகப் படியான போலீஸ் வேண்டுமென்று ரயில்வே அதிகாரிகள் சர்க்காருக்கு அறிவித்தனர்.

இந்த முடிவை, ரயிலை ஓட்டுபவர்களிடம் ரயில்வே தொழிலாளர் அறிவித்தனர். மதுரை ஸ்டேஷன் வருவதற்குச் சற்று முன்பே ரயில் நிறுத்தப்பட்டது. டிக்கெட்டில்லாத பிரயாணிகள் கீழே இறங்கி அங்கிருந்து நடையைக் கட்டினார்கள். அற்புதமான வேலை!"

மேல் நாட்டிருந்து வருபவர்கள் நம்மவர்களை எப்படி எப்படியெல்லாமோ, எதற்கு எதற்கெல்லாமோ பாராட்டுவார்கள். ஆனால் ஹாரிபாலிட்டைப் போல நம்மைப் பாராட்டியவர்கள் இல்லை.

தமிழ்ப்படுத்தியவர்: மூகவை இராஜமாணிக்கம்; பிரசுரம்: ஜனசக்தி பிரசுராலயம், சென்னை – 14; விலை: அணா 8.

✶ ○ ✶ ○ ✶ ○ ✶ ○ ✶ ○ ✶ ○ ✶

தனது உடைகளைக் கவனிக்கிறாள் குமாரி. ஐயோ! பழைய பாவாடையும், சட்டையும். வாத்தியாரம்மாள்மீது குமாரிக்கு ஆத்திரமாக வருகிறது. இன்னும் கொஞ்ச நேரம்தான் அந்த நாடகத்துக்காகப் போட்ட நகைகளையும் — சட்டையையும் கழற்றும வரைந்தால்தான் என்ன...... இந்த வாத்தியாரம்மாள் எப்பவுமே இப்படித்தான் என்று நினைக்கிறாள் குமாரி.

திடீரென நகாரா ஒலிக்கிறது. யாரோ துந்துபி வாத்தியம் முழங்குகிறார்கள். மறுபடியும் பூமாரி, பொழிகிறது. மாளிகை வந்து விட்டது.

"வருக! வருக! இன்பமாளிகைக்கே." யாரோ பாடுகிறார்கள். நாகமணி வாத்தியாரம்மாள் குரல் மாதிரியிருக்கிறதே என்று நினைக்கிறாள் குமாரி.

குதிரைகள் நிற்கின்றன. பல பெண்கள் மாளிகையிலிருந்து வருகிறார்கள். எல்லோரும் பனி போல் வெளுப்பாக இருக்கிறார்கள். மேகராஜன் பெண்கள் போலும், எனக் குமாரி நினைக்கிறாள்.

சற்றே வயதான பெண்மணி ஒருத்தி குமாரியின் தாயார் வயதிருக்கும் அவளுக்கு. ஒரு தங்கத் தட்டுடன் வருகிறாள். முன்னால் அழகான பட்டுத் துணிகள். அதோ! மோதிரம், தங்கம், வைரத் தோடன். குமாரிக்கா இதெல்லாம்! இனி குமாரி அப்பாவைக் கேட்க வேண்டாம். பூமாலை தங்கத்தால் செய்தது. அதை ஒரு பெண் கொண்டு வருகிறாள். இனி தங்கத்துக்குப் பஞ்சமில்லை.

** ** **

"ஏண்டாப்பா! இவ்வளவு நேரம்!" என்ற அத்தைப் பாட்டியின் குரல் குமாரியைப் பூலோகத்துக்குக் கொண்டு வந்து விட்டது. ஆம்! பால்காரனுடன் விவாதம் நடக்கிறது. பாட்டி தான் சண்டை போடுகிறாள்.

குமாரிக்கு இன்னும் பிரமை நீங்கவில்லை. மோதிரம் கைக்கு வருமுன் போய் விட்டதே என நினைக்கிறாள். கனவாகவே தோன்றவில்லை. அவளுக்கு உண்மையிலே தான் பாடினதற்காக மேகராஜன் அளித்த பரிசென்றே நம்பினாள்.

கனவு பலிக்குமா!

அப்பாவைக் கேட்டுப் பார்க்கலாமா! வேண்டாம். ஒருவேளை கோபித்தாலும் கோபிப்பார். ஏன்! வாத்தியாரம்மாள் ராஜம்மாளையே கேட்கலாமா! வெட்கமாகயிருக்கிறது.

அத்தைப் பாட்டிதான் இதற்கெல்லாம் சரி. அவளையே போய்க் கேட்டு விடலாம்.

"ஏன் பாட்டி! கனவு கண்டால் பலிக்குமா!"

"ஏண்டி அம்மா, கெட்ட கனவா! நான் அப்பவே நினைத்தேன், கண்ட கண்ட பேர் முன்னால் மயிலாட்டமா ஆடினால்...மகமாயி நீதான்."

"இல்லே! பாட்டி, நீபாட்டுக்கு ஏதோ சொல்லிக் கொண்டே போகிறாயே. யாரோ நிறைய நகை கொடுப்பதுபோல் கனவுகண்டேன் பாட்டி."

உடனே அத்தைப் பாட்டிக்கு விஷயம் புரிந்து விட்டது. "ஏன்! கட்டாயம் பலிக்கும். அதிகாலையிலே கண்ட கனவு கட்டாயம் பலிக்கும்" என்றாள். பாட்டியின் திடீர் மாற்றத்தைக் கண்ட குமாரிக்கு உடனே சிரிப்பு வந்தது.

"அது சரி பாட்டி. தங்கத்தினாலேயே, ஒரு பெரிய வீடு கட்ட வேணும் பாட்டி."

அதற்குள் வாசலில் கார் 'ஹாரன்' சத்தம் கேட்டது. "யாரது!" என்று கேட்டுக் கொண்டே துள்ளிக் குதித்து வாசலுக்கு ஓடினாள் குமாரி.

பள்ளிக்கூடத் தலைவி ராஜம்மாள்தான். 'டீச்சர் டீச்சர்' என்று குமாரி கூவிக்கொண்டே ஓடினாள்.

"குமாரி, என் கண்ணு! உன் ஆட்டத்தைப் பார்த்து—கலெக்டர், டி. எஸ். பி. துரை இவர்கள் எல்லாம் நிறைய பரிசுகள் கொடுத்திருக்கிறார்கள். இன்று காலையில்தான் கலெக்டர் மனைவி வந்து கொடுத்து விட்டுப் போனார். இந்தா" என்று கூறிக் காரிலிருந்து பளபளவென்று மின்னும் ஒரு பெரிய தாம்பாளத்தை எடுத்தாள்.

"அதே தாம்பாளம்! கனவில் கண்ட அதே பட்டாடைகள். அந்த மோதிரம்கூட இருக்கே." குமாரிக்கு ஆனந்தம் தாங்கமுடியவில்லை. "டீச்சர்! டீச்சர்!" என்று கூவினாள்.

மறுநாள் பள்ளிக்குப் பட்டாடையுடன் போகலாம் என்ற எண்ணம் அந்தச் சிறுமியை இன்ப வெள்ளத்தில் ஆழ்த்தியது.

இப்படியாகக் குமாரியின் கனவு நனவாகியது. அன்று முதல் அவளுக்கு அத்தைப் பாட்டியிடம் பெருமதிப்பு. ஏனென்றால் அத்தைப் பாட்டி சொன்னதெல்லாம் பலித்து விடுகிறது என்பதால்தான். ஆமாம்! கனவுதான் பலிக்கும் என்றுனே அத்தைப் பாட்டி! பலித்துவிட்டதல்லவா!

இருந்தாலும் குமாரிக்கு ஒரே ஒரு சந்தேகம் மட்டும் இருந்தது. தங்கத்தால் மாளிகை கட்ட முடியுமா என்பதுதான் அது. உங்களால் இதைத் தீர்க்க முடியுமானால் குமாரிக்குத் தெரிவியுங்கள்.

ஒளியெப்படியிருந்தாலும்

# 'கோடக்' பிலிம்

# திருப்திகரமான பலன் அளிக்கும்!

எப்படிப்பட்ட ஒளியிலும், ஒவ்வொரு சூட்சும விவரங்களையும் தெளிவாகக் கொடுப்பதற்கு பிரகாசமான ஒளியிலிருந்து, இருண்ட நிழல்வரை தெளிவாக பதியவைத்து உங்களுக்கு சிறந்த படங்களை அளிக்க 'கோடக்' பிலிமையே நம்புவீர்கள்.




**வெரிக்ரோம்** — அவுட்டோர் ஸ்னாப்ஸுக்கு உலகமெங்கும் வெரிக்ரோம் பிலிம்களே விரும்பப்படுகிறது.




**ப்ளஸ்-X** அழகான சிறந்த படங்களுக்கு. விசேஷமாக என்லார்ஜ் செய்ய விரும்பும் படங்களுக்கு மிக உத்தமமானது.




**சூப்பர்-XX** விறுவிறுப்பான ஆக்ஷன் படங்களுக்கு எதையும் விட சிறந்தது. மங்கிய ஒளியிலும், செயல் ஒளியிலும் நல்லபடங்களை கொடுக்கும்

● பிலிம் தீர்ந்து போய் தவிக்கும்படி வைத்துக் கொள்ளாதீர்கள். உங்கள் கோடக் வியாபாரியிடமிருந்து இரண்டு ரோல்கள், ஒன்று உங்கள் தற்போதைய உபயோகத்திற்கும் இன்னொன்று அதிகப்படியாக கையிருப்பிற்கும் இன்றே சென்று வாங்கி வைத்துக்கொள்ளுங்கள்.

**கோடக் லிமிடெட்** (இங்கிலாந்தில் இணைக்கப்பெற்றது)
பம்பாய் - கல்கத்தா - டில்லி - மதராஸ்

K. 9019




மங்கிய வெளிச்சத்தில் மூன்றாம் முறையாக அந்த எண்களின் வரிசையைச் சரி பார்த்தார் கஜேந்திரன். அவருக்குத் தலை சுற்றியது. எதிரே கிடந்த அந்த எண்களின் கூட்டம் அவரைப் பார்த்துச் சிரித்தன. ஆயிரமாயிரம்மாணவர்களின் தலைவிதியை நிர்ணயிக்கும் பரீட்சை முடிவு அது. மனச் சாட்சிக்கு ரொம்பப் பயந்த கஜேந்திரனுக்குத் தெரியும், அந்த எண்களுக்கிடையிலே எத்தனையோ உயிர்கள் ஊசலாடிக் கொண்டிருக்கின்றன என்று. அதனால்தான் அவர் திரும்பத் திரும்ப அந்த எண்களை அலசி அலசிப் பார்த்தார். கண்கள் அவரிடம் ஒய்வு கேட்டுக் கெஞ்சிக் கூத்தாடின. சற்றே நிமிர்ந்து பக்கத்தில் பார்த்தார். ஆனால் அந்த எண்களைப் பார்த்துப் பூத்துப் போன அவர் கண்களுக்கு எதிரில் நாலும் மூன்றும்தான் நின்று நர்த்தனமாடின.

"பரீட்சையாம், பரீட்சை...நம்ம உயிரையல்லவா வாங்குகிறது..." அவர் வாய் முனகியது. பரீட்சை முடிவுகள் மறுநாள் பத்திரிகையில் வெளியாக வேண்டுமே யென்ற கவலை அவருக்கு.

"உம் உயிரை மட்டும்தானா வாங்குகிறது? அது பெரிய பகாசுரன் ஐயா! அது விழுங்குகிற பேருக்குக் கணக்கேகிடையாது."

கடகட வென்ற பேய்ச் சிரிப்போடு வெளி வந்த இந்தப் பதிலைக் கேட்டதும் கஜேந்திரன் திடுக்கிட்டார். அந்த அறையில் அவரைத் தவிர வேறு யாருமே கிடையாதே! ஒரு கால் வேறு யாராவது நம்மையறியாமல் உள்ளே வந்து விட்டார்களோ?

"யார், சார், நீங்கள்? உங்களை யாரு உள்ளே விட்டது இப்போ......?"

உச்சியைச் சிலிர்க்க வைக்கும் அந்தச் சிரிப்பொலி மறுபடியும் கேட்டது.

"என்னை யாரும் விடவில்லை, நானாகத்தான் வந்து விட்டேன். அது சரி, அந்த நம்பரையெல்லாம் சரியாகப் பார்த்தாயிற்றா?"

கஜேந்திரன் தமது இரண்டு கைகளாலும் தலையில் அடித்துக் கொண்டார். கண்களுக்கும் காதுகளுக்கும் இடையில் தேள் கொட்டுவது போன்ற ஒரு உணர்ச்சி உண்டாயிற்று. சலிப்புடன் அவர் கத்தினார்.

"மூன்றுதரம் விளக்கெண்ணெய் போட்டுப் பார்த்தாகி விட்டது. உமக்கென்ன அதைப் பற்றி? நீர் யார் அதைக் கேட்க?"

"பார்த்தாயிற்றா? பதினாயிரம் தடவை பார்த்தாலும் கடைசியிலே ஒரு நம்பர் விட்டுத்தான் போகும். அதுதான் திருவாளர் சின்னதுரை செய்யும் வேலை."

"அது யாரய்யா சின்னதுரை, என்னையறியாமல் இங்கே வேலை செய்கிறது?" என்று கஜேந்திரன் சீறி விழுந்தார்.

"அப்போ உமக்கு விஷயம் தெரியாதென்று சொல்லும். இங்கே பாரும். இந்தப் பத்திரிகையை! ஏழு வருஷங்களுக்கு முன்னாலே வந்தது இது. இந்த இடத்திலே சற்று கூர்ந்து படியும்......"

கஜேந்திரன் முன்னால் ஒரு பழைய பத்திரிகை வந்து விழுந்தது. அவர் கண்களில் பளிச்சென்று பட்டது இந்தச் செய்தி.

*சோலையூர், ஜூன் 17—*

*சின்னதுரை என்ற மாணவன் நேற்று ஆற்றிலே விழுந்து தற்கொலை செய்து கொண்ட விவரம் இந்தப் பத்திகளில் ஏற்கெனவே வெளியாகியிருக்கிறது. பத்திரிகையில் வெளி வந்த பரீட்சை முடிவில்*



தன் நம்பர் வராத காரணத்தினாலேயே அவன் இப்படித் தற்கொலை செய்து கொண்டானாம். ஆனால் உண்மையில் பரீட்சையில் தவற வில்லை யென்றும் பத்திரிகையில் ஏற்பட்ட ஒரு சிறு தவறே இதற்குக் காரணம் என்றும் தெரிகிறது.

"என்ன விழிக்கிறீர்? இந்தச் சின்னதுரை செத்துப் போனதற்குக் காரணமே நான் தான். இப்போ நீர் உட்கார்ந்திருக்கிற இடத்திலேதான் நான் முன்னாலே இருந்தேன். என் தவறால்தான் சின்னதுரை தற்கொலை செய்து கொண்டான். ஆனால் அவன் பின்னால் என்னை உயிருடன் இருக்க விடவில்லை. அப்போ 'ப்ரூப்' பார்த்தது நான் தான். ஆனால் பின்னாலே இப்படி யெல்லாம் என்னைக் கொன்று, பேயாய் அலைந்து திரியும் படிச் செய்து வீண் பழி வாங்குவான் பாவி என்று தெரிந்திருந்தால் இன்னும் கொஞ்சம் ஜாக்கிரதையாகவே பார்த்திருப்பேன். உம் ...இப்போது அதை நினைத்து என்ன பண்ணுவது? விதி என்று ஒன்று இருக்கிறதே அதை இப்பொழுது நினைத்தால்கூட......!"

"என்னய்யா, உளறுகிறீர்? ஒரு பத்திரிகையிலே விட்டுப் போச்சுன்னு மற்றதெல்லாம் பார்க்காமலா மனிதர்கள் தற்கொலை பண்ணிக் கொள்வார்கள்?" கஜேந்திரன் குறுக்குக் கேள்வி போட்டார்.

"உமக்குப் புரியாதுங்காணும் இதெல்லாம். சின்னதுரை எந்தப் பத்திரிகையிலே நம்பரை எடுத்து விட்டானோ, அதே பத்திரிகையைத்தான் எல்லாப் பசங்களும் படிக்கும் படியாக வைத்திடுவான். அப்புறம் வேறு எதையும் பார்க்க விடமாட்டான். அவர்கள் மனசுக்குள்ளே போய், 'ஓடு, ஓடு! தற்கொலை பண்ணிக் கொள்' என்று அலறுவான். அந்த மாணவர்களும் அப்படியே செய்து விடுவார்கள். இப்போது இந்த வருஷம் என் பெண் ஒருத்தி பரீட்சை எழுதியிருக்கிறாள். அதுதான் இப்படிப் பார்த்து விட்டுப் போகலாம் என்று வந்தேன். நீர் என்னதான் ஒழுங்காகப் பார்த்து விட்டாலும் அவள் நம்பர் விட்டுத்தான் போகும். சின்னதுரை அதை எடுத்து அப்பால் தூக்கி வைத்து விடுவான்!"

கஜேந்திரனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. "அப்படியானால் சின்னதுரை ஆவியாகி விட்டானா? அவன்...இங்கே இருக்கிறானா இப்போது? ஐயோ!"

மீண்டும் அந்தச் சிரிப்பொலி கேட்டது.

"தற்கொலை செய்துகொண்டவன் ஆவியாக மாறாமல் பின்னே எப்படியிருப்பான் என்று நினைத்தீர்? பரீட்சையில் தவறி விட்டதாக நினைத்து அவன் தன் உயிரைப் போக்கிக் கொண்ட போது அவன் உள்ளம் என்ன பாடு பட்டது என்று உமக்குத் தெரியுமா? அவன் ஆவியாக மாறின பிறகே உண்மையில் தான் பரீட்சையில் தவறவில்லை என்றும் பத்திரிகை ஆபீஸில் நேர்ந்துவிட்ட பிழையினால்தான் தவற நேர்ந்தது என்றும் தெரிந்தபோது அவன் மனம் பட்ட பாடு உமக்குத் தெரியுமா?"

படபடவென்று பொரிந்து தள்ளிய இந்தக் குரல் மிகவும் கம்பீரமாகவும் ஆத்திரங் கொண்டதாகவும் இருந்தது.

*  *  *

கஜேந்திரன் தம்மைச் சுற்றி ஒரு கண்ணோட்டம் விட்டார். யாரும் இல்லை. அச்சுக் கோத்து வைத்திருக்கும் நான்கைந்து 'காலி' களும், சிதறிக் கிடக்கும் அச்சுகளும்தான் அவரைப் பார்த்துப் பரிகசிப்பது போல இருந்தன. "சே, ஒரே கிறுக்கமாகல்ல இருக்கிறது. இன்னொரு தரம் தான் இந்த நம்பரை யெல்லாம் பார்த்து விடலாமா!" என்று சொல்லிக் கொண்டே அந்தப் பரீட்சை முடிவின் 'ப்ரூப்' இருந்த காகிதத்தை அவசரமாகக் கையிலெடுத்தார்.



பட்டென யாரோ அவரிடமிருந்து அதைப் பிடுங்குவது போல இருந்தது. அவர் உடல் வியர்த்தது. 'யார் அது? சின்னதுரையாயிருக்குமோ?' உம்... அவர் கண்கள் இருட்டியது, நா உலர்ந்து விட்டது.

மீண்டும் அவர் உணர்ச்சி பெற்றுக் கண் விழித்துப் பார்த்த போது அவருடைய வீட்டிலே கட்டிலில் படுத்துக் கிடந்தார் கஜேந்திரன்.

# ஆதார சக்தி





நீங்களும் பெறுக

# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

தினசரி போஜனத்திற்குப் பிறகு ருசிகரமான வாட்டர்பரீஸ் காம்பவுண்டும் சாப்பிட்டு வந்தால் சொற்பகாலத்திலேயே தெம்பும் திடமும் அதிகரிப்பதை காண்பீர்கள். தேக உறுப்புகளுக்கு வலுவூட்ட அவசியமான பொருள்கள் நிறைந்த வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் உங்களுடம்பில் திராணி அதிகரிக்கச் செய்யும். களைப்பேற்படாமல் தெம்பூட்டி ஜலதோஷம், இருமல் வராமலிருக்க அதிக எதிர்ப்பு சக்தியும் பெற உதவுகிறது. இளையோர், முதியோர் யாவருக்கும் சிறந்த ஆரோக்கிய டானிக்.

**WATERBURY'S COMPOUND**

வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

உங்களைத் தெம்புடன் வைத்திருக்கும்




NAS 42-53.



## ஆம், இதுதான் என் திட்டம்!

ஆயிரக் கணக்கான கிராமங்களில் விளக்குகள் எரியும். தறி முதலிய இயந்திரங்கள் சுற்றிச் சுழல, மக்களெல்லாம் வளரும் கிராமக் கைத் தொழிலில் ஈடுபடுவார்கள். அனைவருக்கும் வேலை கிடைக்கும். அதிகப்படியான மின்சார சக்தி உற்பத்திக்காக நம் ஐந்து வருடத் திட்டத்தில் 127 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. பல்வேறு ஹைட்ரோ-எலக்ட்ரிக் திட்டங்கள் நம் தொழிற்சாலைகளுக்கு வேண்டிய மின்சார சக்தியை மலிவாக அளிக்கும். உலகத்தில் தலை சிறந்த நாடுகளுள் நமது நாடும் ஒன்றாக விளங்க உறுதி கொண்டிருப்பதற்கு இவைகளே தக்க சான்றாகும்.

**இவ்வைந்து வருடத் திட்டத்தின் பல்வேறு சாதனங்களில் லக்ஷக்கணக்கான டன் எஃகு உபயோகிக்கப்படும். ஆதலால் நம் நாட்டு மக்களின் வருங்கால வாழ்க்கையை செழிப்புறச் செய்வதில் எஃகானது எண்ணற்ற விதங்களில் ஈடுபடும்.**

**தி டாடா அயரன் & ஸ்டீல் கம்பெனி லிமிடெட்**

TN 3939

"இரண்டு நாட்களாய்க் கண்ணே திறக்க வில்லே. பயமாயிருக்கு" என்று அவர் மனைவி யாரிடமோ சொல்லிக் கொண்டிருப் பது அவர் காதில் விழுந்தது.

"சௌந்தரம், இங்கு வாயேன்" என்று அவர் தம் மனைவியைக் கூப்பிட்டார். அவள் அருகில் வருவதற்குள், "நேற்று வந்த தினப் பத்திரிகையைக் கொண்டு வா" என்ருர்.

அவள் கொண்டு வந்து கொடுத்த பத் திரிகையின் கடைசிப் பக்கத்தில் அவர் கண் களை நிலைக்க வைத்தது இந்தச் செய்தி.

சோலையூர், ஜூன் 17—

நேற்று வெளி வந்த பரீட்சை முடிவு களின் காரணமாக இங்கு ஒரு பரிதாப சம்பவம் நடந்திருக்கிறது. வெளியான முடிவுகளில் தன் நம்பர் காணுமென்று இவ்வூர்ப் பள்ளி மாணவி யொருத்தி விஷமருந்தித் தற்கொலை செய்து கொண் டாள். பிறகு, அந்தப் பெண் உண்மையில் பரீட்சையில் தவறவில்லை என்றும், பத் திரிகையில் நம்பர் தவறுதலாக விட்டுப் போய் விட்டதென்றும் தெரிய வந்தது.

கஜேந்திரன் அதற்கு மேல் படிக்கவில்லே. அவர் உடல் நடுங்கியது. கையிலிருந்த பத் திரிகை அவர் மனசைப் போலப் படபட வென்று அடித்துக் கொண்டது.

"சின்னதுரை செய்த வேலேதான். அப்படி யென்ருல் நம்பர் விட்டுத்தான் போயிருக்கும். இன்னொரு தரம் பார்த்திருந்தால் தேவலே... அந்த மனுஷன் சொன்னுனே, 'குற்றம் என் ருல் அது தெரிந்து செய்தாலும் தெரியாமல் செய்தாலும் குற்றம்தான். தண்டனையை அனு பவித்துத்தான் தீரவேண்டும்' என்று. அப்போ நான்கூடக் குற்றவாளிதானே? எனக்கும்..." அவர் மனசு பேயாட்டம் போட்டது.

எங்கிருந்தோ அந்தச் சிரிப்பொலி மீண்டும் கேட்டது. அவர் பக்கத்திலேயே கேட்டது.

அவர் பயங்கரமாகக் கத்தினுர்.

"சிரிக்கறயா? என்னைப் பார்த்தா? அந்த நாசமாப் போகிற பரீட்சையைப் பார்த்தா? பைத்தியம் மாதிரி சிரிக்கிருயே! அட, நாஞ பைத்தியம்? ஓகோ நீதான் பைத்தியம். இந்தப் பரீட்சையை வைத்தானே அவன் பைத்தியம். அதைக் கட்டி மாரடிக்கிற இந்த மனித கூட்டம் பைத்தியம். ஆமாம்..."

எதிரிலே, பக்கத்திலே, மேலே, கீழே எங் கெல்லாமோ அந்தச் சிரிப்பொலி இடை விடாமல் கேட்டுக் கொண்டிருந்தது.

சுற்றிச் சுற்றிப் பார்த்தார் கஜேந்திரன். யாரும் இல்லே. ஆனல் அந்தப் பேய்ச் சிரிப்பு மட்டும் கேட்டுக் கொண்டேயிருந்தது.

அவர் தம் தலையைப் பிய்த்துக் கொண்டார். அதன் பிறகு அவரும் சிரிக்க ஆரம்பித்து விட்டார்! சிரித்துக் கொண்டே இருந்தார்!

# வட்ட மேஜை

## எத்தனை பேரோ?

எனக்குத் தெரிந்து என் கூடப் படித்த மாணவனெருவன் எஸ். எஸ். எல். ஸி. படித்துத் தேறி விட்டு மேலே படிக்க வழியில்லாத நிலேயி லுள்ளான். அவனுக்குத் தங்கையும் தம்பிகளும் உளர். தகப்பனர் வயதானவர். சொற்பத் தொகையே வருமானம். அதை வைத்துக் கொண்டு அந்தக் குடும்பம் ஜீவித்து வருகிறது.

பையனுக்கோ வயது இருபதாகிறது. வேலே தேடித் தரும் ஸ்தாபனத்தில் பதினெட்டு மாதங்க ளாகப் பெயரைப் பதிவு செய்திருக்கிறன். பையன் வேலேக்காக வெளியிடங்களுக்கும் சென்று வரு கிறன். இவனுக்கு வேலே கிடைக்கவில்லே என்ற காரணத்தினல் தகப்பனர் பேசாத பேச்சில்லே. இப்படி எத்தனை பேர் இருக்கிருர்களோ!

மதுரை
27—5—54

ஆர். சேஷாத்திரி

★

## உதவி செய்யுங்கள்!

பெரம்பூர் சங்கீத சபையின் இவ்வருடத்து தியாகப் பிரும்ம விழா வெகு சிறப்பாக அமைந்து விட்டது. இன்றையதினம் கர்நாடக சங்கீதத்தில் பழுத்த அநுபவம் கொண்ட வித்வான்களும், வித்வாம்ஸினிகளும் இவ்விழாவில் கலந்துகொண்டு கச்சேரி செய்து சிறப்பளித்தனர்.

ஸ்ரீமான்கள் முசிரி, அரியக்குடி, மஹாராஜ புரம், செம்மங்குடி, மாலி, ஜி. என். பி., மதுரை மணி அய்யர், தண்டபாணி தேசிகர், மாயவரம் கிருஷ்ணய்யர், ஸ்ரீமதிகள் டி. கே. பட்டம்மாள், எம். எல். வி., கே. என். தனம் மற்றும் பிரபல பக்க வாத்தியக்காரர்களான, ஸ்ரீமான்கள் பாலக் காடு மணி, பழனி சுப்புடு, மாஸ்டர் ரகு, சௌடய்யா, பாப்பா, லால்குடி ஜயராமன் முதலிய வித்வான்கள் கலந்து கொண்ட சங்கீத விழாவின் சிறப்பை எப்படி விவரிப்பது!

பெரம்பூர் சங்கீத சபையினருக்கு, கர்நாடக சங்கீத வளர்ச்சியிலுள்ள சிரத்தைதான் அள விடக் கூடியதா! எல்லாவற்றுக்கும் மேலாக அந்த நிர்வாகிகளுக்கு, வீணைச் சக்கரவர்த்தி காரைக்குடி சாம்பசிவ அய்யர் அவர்களின் அமோகமான ஆதரவும், ஆசியும் கிடைத்திருக் கின்றன. நாதோபாசனையையே தம்முடைய வாழ்க்கை லட்சியமாகக் கொண்ட அம்மூது பெரும் பூஜ்யர் விழாத் துவக்க தினத்தன்று, தம் பேத்தி குமாரி ராஜேசுவரியுடன் வீணு கானம் செய்து ரஸிக உள்ளங்களைக் குளிர் விக்கச் செய்து விட்டாரல்லவா!

விழாவில் கலந்து கொண்ட ஒவ்வொரு பாட கரும், பாடகியும், பக்க வாத்தியம் வாசித்த வித்வான்களும் தங்கள் முழுத்திறமையும் நன்கு விகஸிக்கும்படி கச்சேரி செய்தனர்.

குறிப்பாக, மதுரை மணி அய்யர் அவர்களின் கச்சேரியில் அவர் பாடிய பாடல்களும், பாலக் காடு மணி அய்யரும், பழனி சுப்புடுவும் சேர்ந்து வாசித்த தனி ஆவர்த்தனமும், இசை ரஸிகர்கள் சமீப காலத்தில் கேட்டு அநுபவித்திராதவை களே! அதுபோலத்தான் 'மாலி' அவர்களின் புல்லாங்குழல் கச்சேரியும் அமைந்திருந்தது.



சென்னை மாநகராண கௌரவ மாஜிஸ்டிரேட் திரு கே. ராமய்யாப் பிள்ளை அவர்களின் பேத்தியும், சென்னை மின்சார இலாகா உதவி இன்ஜினியர் திரு கே. ஆர் ராதாகிருஷ்ணன் அவர்களின் செல்வப் புதல்வியுமான குமாரி ராமதிலகத்துக்கும் திரு கே. ஆர். காயாரோகணம் பிள்ளை அவர்களின் செல்வப் புதல்வன் திரு கே. ஞானகிராமனுக்கும் மேமீ 21உ அன்று சென்னையில் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. வாழ்க மணமக்கள்!

ஆனால் இவ்வளவு அற்புதமான கச்சேரிகளையும் கேட்பதற்கு ஏற்ற இடவசதியில்லாதது மேற்படி சங்கீத சபைக்குப் பெருங் குறையே.

சங்கீத ரஸிகர்கள் மனம் வைத்தால், பெரம்பூர் சங்கீத சபையினர் வருங்காலத்தில் ஒரு கட்டிடத்தைத் தங்களுக்கென்று கட்டிக் கொள்ளலாம்.

இத்தகைய பேரார்வம் உடைய நிர்வாகிகளுக்கு இவ்விஷயத்தில் உதவி செய்வதைச் சங்கீத ரஸிகர்கள் பெரும் பாக்கியமாகக் கருத வேண்டும்.

சென்னை
27—5—54
ஜடாதரன்

★

## தமிழர் வெற்றி!

இலங்கை இந்தியர் காங்கிரஸ் 14-வது மகாநாட்டுக்கு, வரவேற்புக் கமிட்டித் தலைவராயிருந்த திரு வி. அண்ணாமலை அவர்கள் மேமீ 21உ அன்று அவர் இருக்கும் சிங்களத் தொகுதி கிராமக் கமிட்டிக்கு, இரண்டாவது வார்டுக்குப் போட்டி போட்டார். 312 சிங்கள வாக்குகளில், அவருக்கு 191 வாக்குகளும், அவருடன் போட்டியிட்டவருக்கு 87 வாக்குகளும் கிடைத்தன. 104 அதிக வாக்குகளில், கண்டுக்கல இகல, இரண்டாவது வார்டுக்குக் கிராமக் கமிட்டி அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளார்.

இலங்கையில் தமிழர்கள், அதிலும் தோட்ட முதலாளிகள். சிங்கள வாக்குகளை எதிர்பார்த்து, கிராமக்கமிட்டி அங்கத்தினர் பதவிக்குப் போட்டியிட்டு, வெற்றி பெற்றது இதுவே முதல் தடவை.

கம்பளை
23—5—54
இராம. லட்சுமணன்

★

## பலன் என்ன?

சமீபத்தில் வெளியாகிய செய்திகளின்படி மத்திய சர்க்கார் வேலை தேடித் தரும் ஸ்தாபனங்களையும் அதனால் நடத்தப்பட்டு வரும் தொழிற் பயிற்சிகளையும் நிரந்தரமாக்கப்போவதாகத் தெரிகிறது. இந்தச் சந்தர்ப்பத்தில் ஓர் உண்மையை எடுத்துக் கூற விரும்புகிறேன். இது போன்ற தொழிற் பயிற்சிப் பள்ளிகள் ஒன்றில் — மங்களூரிலே பதினெட்டு மாதங்கள் பயிற்சி பெற்று டிராப்ட்ஸ்மென் நற்சாட்சிபத்திரத்துடன் வெளியேறியவர்களிலே நானும் ஒருவன். அரசாங்கத்தால் அளிக்கப்பட்ட நற்சாட்சிக்குக் கண்டிப்பாக மதிப்பு இருக்கும் என்ற நம்பிக்கையுடன் சென்ற என் எண்ணத்திலே மண் விழுந்தது. சென்ற இரண்டு வருடங்களாக நான் வேலைக்கு மனுப் போடாத இடமில்லை. நூறு இடங்களுக்கு மனுப் போட்டும் ஒன்றிலிருந்தாவது சரியானபடி பதில் வரவில்லை. மாதம் இருபத்தைந்து ரூபாய் உதவித் தொகை மூலமும் மற்றும் பல விதங்களிலும் சர்க்கார் என் பயிற்சிக்காக, என்னைப் போன்றவர்களின் பயிற்சிக்காக லட்சக்கணக்கான ரூபாய்களைச் செலவிட்டிருக்கிறது. செலவு செய்து கொண்டு வருகிறது. அதே போல நானும் நூற்றுக்கணக்காக ரூபாய்களைச் செலவு செய்திருக்கிறேன். இன்று நிலைமை என்ன! தொழிற் கல்வி கற்றவர்களுக்கு நல்ல வரவேற்பு இருக்கும் என்று எண்ணியபடி நடக்கவில்லை.

நான் கோருவது என்னவென்றால் இந்தப் பள்ளிகளில் பயின்ற இளைஞர்களுக்குச் சர்க்கார் வேலைகளுக்கு அவர்களுடைய சர்டிபிகேட்டுகள் தகுதியானவை என்று சட்டமியற்ற வேண்டும். புதிது புதிதாக ஆரம்பிக்கும் பெரிய தொழில் முறை ஸ்தாபனங்களுக்கு அவர்களைத் தயங்காமல் எடுத்துக் கொள்ள வேண்டும். அப்படிச் செய்து பயிற்சி பெற்றுப் பரிதவிக்கும் இளைஞர்களுக்கு வழி செய்யாமல், மேன்மேலும் பயிற்சி அளித்துக் கொண்டே போவதில் என்ன பலன்?

நாமக்கல்
20-5-54
கே. சத்தியநாராயணன்

★

## இரவுக் கல்லூரிகள்

ஏப்ரல் மாதம் 26உ கல்கி இதழில் "இரவுக் கல்லூரிகள்" என்ற தலைப்பின்கீழ் வெளியான கடிதத்தின் வேண்டுகோள் வெற்றிபெறும் தறுவாயில் இருக்கிறது. டில்லி சர்வகலாசாலை அதிகாரிகள் இந்திய சர்க்காருக்குத் தாங்கள் இரவுக் கல்லூரிகளை எடுத்து நடத்துவதற்கு வேண்டிய அனுமதி கோரி எழுதி இருக்கிறார்கள்.

முதலில் டில்லி சர்வகலாசாலை 800 மாணவமாணவிகளுக்கு இரவுக் கல்லூரிகளில் கல்வி பயில வசதி அளிக்கும். பிறகு அடுத்த ஒரு வருடத்துக்குள் இன்னுமொரு இரவுக் கல்லூரியைத் திறந்து வைக்கும்.

மிகவும் மகிழ்ச்சி தரக் கூடிய விஷயம் என்னவென்றால், டில்லியிலுள்ள ஒரு கல்லூரி தனது கட்டிடத்தை இரவுக் கல்லூரிகளை நடத்துவதற்குத் தருவதாக ஒப்புக் கொண்டதேயாகும்.

டில்லி சர்வகலாசாலை பஞ்சாப் சர்வகலாசாலையாரின் கல்லூரியைப் போல் நிறைய மாணவர்களுக்குக் கல்வி அளிக்க வசதி ஏற்படுத்தும் வரை பஞ்சாப் சர்வகலாசாலை இரவுக் கல்லூரிகளை நடத்துவதற்குத் தடை யொன்றும் செய்யாது என்றும் டில்லி சர்வகலாசாலை அதிகாரிகள் ஒரு அறிக்கை வெளியிட்டுள்ளனர்.

புதுடில்லி
8—5—54
டி. வி. சங்கரன்

Edited, Printed and Published by K Krishnamurthy at the "Kalki Prees,
No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras 10.

# சீர்தூக்கிப் பாருங்கள்

## விளம்பரதாரர்களே...

## நீங்கள் உபயோகிக்கும் பத்திரிகையைப் பற்றிய உண்மையைத் தெரிந்து கொள்ளுங்கள்!

ஆடிட் பீரோ ஆப் சர்குலேஷன்ஸ் என்ற ஸ்தாபனந்தான் சுருக்கமாக ஆங்கிலத்தில் **ABC** என்று சொல்லப்படுகிறது. இந்த **ஏபிஸி** ஸ்தாபனத்தில் இந்தியா, பாகிஸ்தான், சிலோன் ஆகிய நாடுகளில் 13 பாஷைகளில் நடத்தப்படும் 175க்கு மேற்பட்ட பிரதான பத்திரிகைகள் அங்கம் வகிக்கின்றன. இந்தப் பத்திரிகைகளின் விற்பனை கணக்கு எந்த சமயத்திலும் **ஏபிஸி** ஸ்தாபனத்தின் ஆடிட்டர்களால் பரிசோதிக்கப்பட்டு, அந்தந்த பத்திரிகையின் நிகர விற்பனை எண்ணிக்கை சர்டிபிகேட்டை ஆறு மாதத்திற்கு ஒரு முறை **ஏபிஸி** ஸ்தாபனத்தின் அங்கத்தினர்களுக்கு அனுப்பப்படுகிறது. ஒரு விளம்பரதாரர் என்ற முறையில் நீங்கள் **ஏபிஸி** ஸ்தாபனத்தின் அங்கத்தினராக இருந்தால் உங்களுக்கும் அந்த சர்டிபிகேட் அனுப்பப்படும். அப்போது உங்கள் விளம்பரத்திற்கு நீங்கள் உபயோகிக்கும் பத்திரிகையின் உண்மை நிகர விற்பனையை நீங்கள் அறிந்து கொள்வதுடன் நீங்கள் செலவழிக்கும் ஒவ்வொரு ரூபாய்க்கும் எவ்வளவு வாசகர்களைப் பெறுகிறீர்கள் என்ற உண்மையும் தெரிய வரும்.

## ஆடிட் பீரோ ஆப் சர்குலேஷன்ஸ் லி-ட்.

பாரத் ஹவுஸ், அபோலோ தெரு :: கோட்டை, பம்பாய்

*கீழ்க்கண்ட விளம்பரதாரர்களும் விளம்பர ஏஜண்டுகளும் ஏற்கனவே ABC யின் அங்கத்தினர்களாக இருக்கிறார்கள்.*

**விளம்பரதாரர்கள் —**

*அல்லேடு போட்டோகிராபிக்ஸ் லி-ட்., ஆயுர் வேதாஸ்ரமம் பார்மஸி லி-ட்., இ. எம். ஆல்காக் அண்டு மொஹாட்டா லி-ட்., அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லி-ட்., பால்மர் லாரி அண்டு கம்பெனி லி-ட்., பம்பாய் மியூச்சுவல் லைப் அஷ்யூரன்ஸ் சொஸைட்டி லி-ட்., பூட்ஸ் ப்யூர் ட்ரக் கோ. (இந்தியா) லி-ட்., பர்மா ஷெல் ஆயில் ஸ்டோரேஜ் அண்டு டிஸ்ட்ரிபியூட்டிங் கோ. ஆப் இந்தியா லி-ட்., கால்டெக்ஸ் (இந்தியா) லி-ட்., உ. போர்டு, கார்ன் ப்ராடெக்ட்ஸ் கோ. (இந்தியா) லி-ட்., டன்லப் ரப்பர் கோ. (இந்தியா) லி-ட்., கிளாக்ஸோ லாபரட்டரீஸ் (இந்தியா) லி-ட்., கோத்ரெஜ் அண்டு பாய்ஸ் மானுபாக்சரிங் கோ., லி-ட். இம்பீரியல் கெமிகல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) லி-ட்., இம்பீரியல் டுபாகோ கம்பெனி ஆப் இந்தியா லி-ட்., இந்தியா டயர் அண்டு ரப்பர் கோ. (இந்தியா) லி-ட்., லீவர் பிரதர்ஸ் (ஸிலோன்) லி-ட்., லீவர் பிரதர்ஸ் (இந்தியா) லி-ட்., லிப்டன் லி-ட்., ஜே.எல். மாரிஸன் ஸன் அண்டு ஜோன்ஸ் (இந்தியா) லி-ட்., ஸி & இ. மார்ட்டன் (இந்தியா) லி-ட்., முல்லர் & பிப்ஸ் (இந்தியா) லி-ட்., நாஷனல் கார்பன் கோ. (இந்தியா) லி-ட்., பார்ஸி ப்ராடெக்ட்ஸ் மானுபாக்சரிங் கோ. லி-ட்., பஞ்சாபி சந்து ஹல்வாய், ஸேல்ஸ் ப்ராடெக்ட்ஸ் ஓவர்ஸீஸ் லி-ட்., ஷாலிமார் பெயிண்ட், கலர் அண்டு வார்னிஷ் கம்பெனி லி-ட்., டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லி-ட்., வால்கார்ட் பிரதர்ஸ்.*

**விளம்பர ஏஜெண்டுகள் —**

*அட்வர்டைஸிங் & ஸேல்ஸ் ப்ரமோஷன் கோ., ஈஸ்டர்ன்ஸ், எபிஷியண்ட் பப்ளிஸிட்டிஸ் லி-ட்., எவரெஸ்ட் அட்வர்டைஸிங் லி-ட்., கிராண்ட் அட்வர்டைஸிங் இன்க்., கீர்ன்ஸ் அட்வர்டைஸிங் சர்வீஸ் ஏஜண்ட்ஸ், இந்தியா அட்வர்டைஸிங் சர்வீஸ், டி. ஜே. கீமர் அண்டு கோ. லி-ட்., லிண்டாஸ் லி-ட். பி. எஸ். மணி அண்டு கம்பெனி, நேஷனல் அட்வர்டைஸிங் சர்வீஸ் லி-ட்., பிரம் ஸிண்டிகேட் லி-ட்., ரஞ்சித் சேல்ஸ் அண்டு பப்ளிஸிட்டி லி-ட்., ஸில்பி லி-ட்., ஸிஸ்டாஸ் லி-ட்., எப். டி. ஸ்டுவர்ட் லி-ட்., எஸ். ஏ. ஸ்ட்ரோனக் அண்டு கோ. (இந்தியா) லி-ட்., ஜே. வால்டர் தாம்ஸன் கம்பெனி (ஈஸ்டர்ன்) லி-ட்.*

*இதைப் பிரசுரித்தவர்கள் :*

**ABC ஸ்தாபனத்தின் அங்கத்தினரான 'கல்கி' பத்திரிகை சொந்தக்காரர்கள்**



REGISTERED No. M. 4392

*Registered as a newspaper in Ceylon*